# சங்கடமான நேரங்களா?

# நவக்கிரகங்களையும் தரிசித்து உங்கள் நேரத்தை நல்ல நேரமாக்க வேண்டிய தருணம் இது...




















நவகிரகங்களும் நன்மையை அள்ளித்தரும் கோவில்கள் நமது தமிழ் நாட்டில் மட்டுமே! தஞ்சாவூரிலிருந்து இவை அனைத்திற்கும் எளிதில் செல்ல முடியும்.

அருகில் உள்ள TTDC சேல்ஸ் அலுவலகத்தை உடனடியாகத் தொடர்பு கொள்ளுங்கள் பிரபஞ்சத்தின் நவ கோள்களையும் பூமியிலேயே நன்றாய் தரிசனம் செய்யுங்கள்




மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்க:

**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்**

தமிழ்நாடு சுற்றுலா வளாகம், வாலாஜா ரோடு, சென்னை - 600 002.

தொலைபேசி: 91- 44 -2538 8785, 2536 1640

ஃபேக்ஸ்: 91- 44 - 2538 2772 E-mail:ttdc@md3.vsnl.net.in

Visit us at: http/www.tamilnadutourism.org visit us at : www.tn.gov.in

● கோயம்புத்தூர் : 0423-2443977 ● மதுரை: 0452-2334757

● திருச்சி : 0431-2460136 ● சேலம் : 0427-2316449 ● தஞ்சாவூர் : 04362-230984

enchanting tamil nadu
experience yourself

DIPR/747/DIS/2004/ELEGANT

அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 108 ஜூலை : 2004 புன்னகை : 5



மாய மந்திரவாதி

13



நவீன வேதாளக் கதை

19



அயல் நாட்டுக் கதைகள்

52



விஷ்ணு புராணம்

57

## பொருளடக்கம்




**SUBSCRIPTION**

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

*Remittances in favour of*
*Chandmama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# மணிக்கொடியின் கீழ் இணைவோம்

ஒலிம்பிக் விளையாட்டுக்களின் சரித்திரத்தில் முதல் முறையாக, ஒலிம்பிக் ஜோதியைப் பெறும் நாடுகளில் ஒன்றாக நமது பாரதநாடு தேர்வு செய்யப்பட்டுள்ளது. இந்தச் சிறப்பு மிக்க சம்பவம் தலைநகரான தில்லியில் கடந்த ஜூன் மாதம் 10ந் தேதி நடைபெற்றது. ஒலிம்பிக் ஜோதி உலக அமைதியின் சின்னமாகப் போற்றப்படுகிறது. 'ஜோதியைப் பெற்றுக் கொண்டு மற்ற உலக நாடுகளுக்கு நட்புக் கரம் நீட்டுங்கள்' என்பதே இந்த ஆண்டு ஒலிம்பிக் ஜோதியின் விஷயமாகும்.

உலகப்போர் நடந்த சமயங்களில் கூட, ஒலிம்பிக் போட்டிகளில் பங்கேற்பதற்காகவென்றே, போர் இடையில் நிறுத்தப்பட்டது, எனில் உலக அமைதிக்கு அடிகோலும் முக்கியமான நிகழ்ச்சிகளில் ஒலிம்பிக் போட்டிகளும் ஒன்று என்று சந்தேகமறத் தெரிகிறது.

பாரதநாட்டில் தற்போது விளையாட்டு நிகழ்ச்சிகளுக்கு முன்பிருந்ததை விட அதிகமான முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. இப்போது விளையாட்டுத் துறைக்காகவென்றே அமைச்சர்களும், பிரத்தியேக அலுவலகங்களும் உருவாக்கப்பட்டு வருவதைக் காண்கிறோம்.

ஒலிம்பிக் ஜோதி தில்லியில் வந்த அன்று, அதிலிருந்து ஒரு பாரத ஜோதி உண்டாக்கி அதை எடுத்துக் கொண்டு பாரதமெங்கும் சுற்றி வந்திருந்தால் எவ்வளவு நன்றாய் இருந்திருக்கும்! ''ஒரு தாய் மக்கள் நாம் என்போம்'' என்ற ஒற்றுமை உணர்வை நமது பாரத மக்களிடையே அது மிகச் சிறப்பாக உண்டாக்கியிருக்கும்.

நமது நாட்டில் மிகச் சிறப்பு வாய்ந்த, தகுதியுள்ள விளையாட்டு வீரர்கள் இந்த முறையும் ஒலிம்பிக்கில் பங்கேற்க உள்ளனர். பல்லாயிரக்கணக்கான வாசகர்களின் சார்பாக, சந்தமாமா அவர்கள் வெற்றிக்காகப் பிரார்த்தனை செய்கிறது.

*ஆசிரியர் :* **விஸ்வம்**

Visit us at : http://www.chandamama.org





# ஒலிம்பிக் புதிர்ப் போட்டி

பங்கு பெறுங்கள்

& அம்புலிமாமா

விசேஷப் பரிசு



ஆக்சர் கம்ப்யூட்டர்

1வது பரிசு



கேமராக்கள்

2வது பரிசு



கால்குலேட்டர்கள்

2004ம் ஆண்டு மே மாதம் அறிமுகப்படுத்தப்பட்ட நியூட்ரின் சந்தமாமா ஒலிம்பிக் புதிர்ப் போட்டி தொடர்ந்து ஆறு மாதங்களுக்கு சந்தமாமா இதழில் வெளிவரும். கீழ்க்காணும் கேள்விகள் ஒலிம்பிக் பந்தயங்களைப் பற்றிய உங்கள் ஆர்வத்தையும் அறிவையும் தூண்டுவனவாக அமையும். அவற்றுக்கு சரியான விடைகளைத் தேர்ந்தெடுத்து, நுழைவுக் கூப்பனைப் பூர்த்தி செய்து, நியூட்ரின் சாக்லெட் எக்ளேர்ஸின் ஐந்து மேலுறைகளுடன் சேர்த்து போட்டியிறுதித் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்குமாறு கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும் **நியூட்ரின் சந்தமாமா பரிசுப் போட்டி, சந்தமாமா இந்தியா லிமிடெட், 82, டிஃபன்ஸ் ஆபிஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத் தாங்கல், சென்னை-600 097.**

இது ஒரு அகில இந்தியப் போட்டி. ஒவ்வொரு மாதமும் சந்தமாமா இதழில் வெளி வரவிருக்கும் இந்தப் போட்டியில் கலந்து கொள்வீர். 3 கோனிகா கேமராக்கள், 10 கால்குலேட்டர்கள், 50 நியூட்ரின் ஸ்வீட் ஹாம்பர்கள் ஆகியவை முறையே முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகளாக ஒவ்வொரு மாதமும் வழங்கப்படும். இவ்வாறு ஐந்து மாதங்கள் போட்டி நடந்த பிறகு, 6வது மாதம் நடக்கவிருக்கும் மெகாப் பரிசுப் போட்டியில் வெற்றி பெறும் அதிருஷ்டசாலியான நபருக்கு மற்ற பரிசுகளுடன் விசேஷப் பரிசாக ஒரு கம்ப்யூட்டர் வழங்கப்படும். இந்த விசேஷப் பரிசைப் பெறும் நபர் 6 போட்டிகளிலும் கலந்து கொண்டவராக இருக்க வேண்டும். மெகாப் பரிசுப் போட்டியில் வெற்றி பெறும் நபர்களுக்கு டிசம்பர் மாதம் தபால் மூலம் செய்தி அனுப்பப்படும்.

## நியூட்ரின் சந்தமாமா ஒலிம்பிக் புதிர்ப் போட்டி-3

கீழ்க்கண்ட கேள்விகளை கவனத்துடன் படித்து, அதற்கான சரியான விடைகளை அருகிலுள்ள சதுரப் பெட்டியில் (✓) குறியிட்டு அனுப்பவும்.

1. ஒலிம்பிக் போட்டியில் ஒரு நாடு வெல்லும் ஒவ்வொரு தங்கப்பதக்கத்திற்கும் எவ்வளவு டாலர்கள் தரப் படுகின்றன?
   - ☐ ஐந்து ☐ மூன்று ☐ இரண்டு
2. ஒலிம்பிக் போட்டிகளில் 1920ம் ஆண்டு வரை நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி இடையில் நிறுத்தப்பட்டு மீண்டும் 1972ம் ஆண்டு மியூனிச் ஒலிம்பிக் போட்டியிலிருந்துத் தொடரப் பட்டது. அது என்ன நிகழ்ச்சி?
   - ☐ குத்துச் சண்டை ☐ கராத் ☐ வில்-அம்புப் போட்டி
3. 1996ம் ஆண்டு அட்லாண்டாவில் நடந்த ஒலிம்பிக்கில் அமெரிக்க ஐக்கிய நாடுகள் எவ்வளவு தங்கப்பதக்கங்கள் பெற்றது?
   - ☐ 44 ☐ 48 ☐ 52
4. இதுவரை நடந்த ஒலிம்பிக் போட்டிகளில் 100 மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் உலக சாதனை நிகழ்த்தியவர் யார்?
   - ☐ மைக்கேல் ஜான்சன் ☐ டோனாவான் பெய்லீ ☐ சயத் ஆவிடா
5. இந்த இதழில் வெளிவந்துள்ள நியூட்ரின் விளம்பரத்தில் ஆங்கில எழுத்தான "C" எத்தனை முறை வருகிறது?
   - ☐ 10 ☐ 16 ☐ 12

**உங்களுக்குத் தெரியுமா?**



1960ம் ஆண்டு ரோமில் நடந்த ஒலிம்பிக் மராத்தன் ஓட்டப் பந்தயத்தில் எத்தியோப்பியா நாட்டைச் சேர்ந்த அபேபே பிகிலா என்பவர் ஷூ எதுவும் அணியாமல் வெறுங் கால்களுடன் ஓடி முதலாவதாக வந்து தங்கப் பதக்கத்தைப் பெற்றார். இதே சாதனையை 1964ம் ஆண்டு டோக்கியோவில் நடந்த ஒலிம்பிக்கில் இரண்டு முறை தங்கப்பதக்கம் வென்றார்.

**போட்டியின் விதிமுறைகள்:** ●நியூட்ரின், சந்தமாமா நிறுவனங்களின் பணிபுரிபவர்களும் அவர்களது உறவினர்களும் இப்போட்டியில் பங்கு பெறக் கூடாது. ●[illegible] ●இந்திய குடிமக்களான 15 வயதுக்குட்பட்டவர்களே போட்டியில் கலந்து கொள்ளத் தகுதி பெற்றவர். ●இந்தப் போட்டியை நீட்டிக்கவோ அல்லது இடையிலேயே நிறுத்தவோ நியூட்ரினுக்கு விசேஷ உரிமை உண்டு. ●பங்கு பெறுபவர்கள் தங்கள் வயதுக்கு அத்தாட்சியாக தங்கள் பிறப்புச் சான்றிதழின் நகலையும் சேர்த்து அனுப்ப வேண்டும். ●சரியான விடைகள் அனுப்பியவர்கள் ஒன்றுக்கு மேலிருந்தால் வெற்றி பெறுபவர் சீட்டு குலுக்கித் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். ●வெற்றி பெற்றவர்களுக்கு தபால் மூலம் செய்தி அனுப்பப்படும். ●பரிசுக்கு பதிலாக பணமாகத் தர இயலாது. ●பரிசுப் பொருட்களின் உத்திரவாதம் அவைத் தயாரிக்கும் நிறுவனங்களைப் பொறுத்தது. ●பங்கு பெறுபவர்கள் மாதத்திற்கு ஒரு நுழைவுக் கூப்பன் மட்டுமே அனுப்பிக்க முடியும். ●ஆறு போட்டிகளிலுமோ, அல்லது ஏதாவது ஒரு சில போட்டிகளிலுமோ பங்கேற்பது அவரவர்கள் விருப்பத்தைப் பொறுத்தது. ●இந்தப் போட்டியின் தொடர்பாக கடிதங்களைத் தவிர மற்ற எந்த தபால் தொடர்புக்கும் அனுமதியில்லை. ●இந்த நுழைவுக் கூப்பனில் கையொப்பமிட்டு அனுப்பினால், நீங்கள் இந்தப் போட்டியின் விதிமுறைகளுக்குக் கட்டுப்படுகிறீர்கள் என்று பொருள். ●கடைசித் தேதிக்குப் பிறகு வரும் கூப்பன்கள் ஏற்றுக் கொள்ளப்படாது. ●எந்த ஒரு போட்டியிலும், எல்லாக் கேள்விகளுக்கும் சரியான விடை அளிப்பவர்கள் யாருமே இல்லையெனில், அதிகபட்சம் சரியான விடைகள் அளித்திருப்பவர்களைத் தேர்வு செய்து அவர்களுக்குள் வெற்றி பெறும் அதிருஷ்டசாலிகள் சீட்டுக் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். ●நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.

**கடைசித் தேதி 31 ஜூலை 2004**

பெயர்: ....................................................

வயது: .............. வகுப்பு: .............. பிறந்த தேதி: ..............

வீட்டு முகவரி மற்றும் பின் கோடு : ....................................

....................................................

கையொப்பம்: ....................................






India's largest selling sweets and toffees.

# வாசகர்களுக்குக் கதைப் போட்டி (பிப்ரவரி)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



**கா**ணாமல் போன வைரமாலையை யாரும் எடுக்கவில்லை என்று பணியாட்கள் கூறிவிடவே இறுதியாக ராம்தீர்த்தன் நாராயணின் அருகில் வந்து அவனிடம், ''நாராயணா உனக்கு அந்த வைரமாலையைப் பற்றி ஏதேனும் தெரியுமா? நீ எங்கேயாவது பார்த்தாயா? என வினவினார். இதைக் கேட்டதும் நாராயணன் ''ஆமாம் ஐயா, நான் அதைப் பார்த்தேன்'' என்று சர்வசாதாரணமாக பதிலளித்தான். ''என்ன நீ பார்த்தாயா? எங்கே பார்த்தாய்? எங்கு இருக்கிறது என்று காட்டு, போய் எடுத்து வரலாம்? எங்கு இருக்கிறது என்று காட்டு எடுத்து வரலாம்'' என்றவாறு கிளம்பினான் ராம்தீர்த்தன்.

இதை சற்றும் எதிர்பாராத நாராயணன். ''ஐயா...'' என்று இழுத்தவாறு ''அது என்னிடம் தான் உள்ளது'' என்று கூறினான். நாராயணனின் பதிலைக் கேட்ட மாத்திரத்தில் ''என்ன உன்னிடம் உள்ளதா. இவ்வளவு நேரம் உன்னிடம் வைத்துக் கொண்டா ஒன்றும் தெரியாதவன் போல் இருந்தாய். ஏன் மாலையை என்னிடம் கொண்டு வந்து கொடுக்கவில்லை'' என்றான்.

''ஐயா, ஒருமுறை கீழே கிடந்த நாணயத்தை நான் எடுத்து வந்து உங்களிடம் கொடுத்தேன் அல்லவா அதை நீங்கள் என்ன செய்தீர்கள் என்று உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா?' என்று கேட்டான்.

''ஆமாம் நன்றாக ஞாபகம் இருக்கிறது. அதை உனக்கு அன்பளிப்பாக உன்னிடமே கொடுத்து விட்டேன்'' என்றான் ராமதீர்த்தன்.

''அன்று அந்த நாணயத்தை எனக்குப் பரிசாக கொடுத்தது போல் இந்த வைரமாலையையும் எனக்கு நீங்கள் பரிசாகக் கொடுத்து விடுவீர்கள் என்று எனக்குத் தெரியும். அந்த வேலையை உங்களுக்கு ஏன் கொடுக்க வேண்டும் என்று நானே வைத்துக் கொண்டேன்'' என்றான் நாராயணன்.

ராம்தீர்த்தனுக்கு நாராயணனைக் கடிந்து கொள்வதா அல்லது அவனது பேச்சு திறனை ரசித்து சிரிப்பதா என்று தெரியாமல் அன்று தங்க நாணயத்தை தவறுதலாக அவனுக்குப் பரிசாக கொடுத்ததை எண்ணி வருந்தினான்.

**ந.சங்கரேஸ்வரி** (5ம் வகுப்பு) எண் 80, நரசிங்கபுரம் தெரு,
குகை சேலம்- 636 006. தமிழ்நாடு.



# பேராசையினால் வந்த ஆபத்து

**சே**கருக்கு மூன்று வயதாகி இருந்தபோது, அவன் தாய் இறந்து விட்டாள். அவனுடைய தந்தை மருதையால் சேகரை சரியாகப் பராமரிக்க முடியாததால், துர்கா என்ற பெண்ணை மறுமணம் செய்து கொண்டான். ஆனால் மணம் புரிந்த சில நாட்களுக்குள்ளேயே, தன் இளம் மனைவி துர்கா மிகவும் குறுகிய மனமும், பேராசையும் பிடித்தவள் என்று அவன் தெரிந்து கொண்டான்.

துர்கா தன் கணவன் மருதையை லட்சியமே செய்வதில்லை. தன்னுடைய ஆடம்பரச் செலவுகளுக்காக மருதையின் பணத்தையெல்லாம் வாரியிறைத்துக் கொண்டிருந்தாள்.

மருதையிடம் மூன்று ஏக்கர் நிலம் இருந்தது. அதில் கிடைக்கும் விளைச்சலை விற்று கௌரவமாகக் குடும்பம் நடத்த விரும்பிய மருதைக்கு தன் மனைவியின் ஆடம்பரத்தினால் உண்டாகும் செலவுகள் அதிர்ச்சியைத் தந்தன. சேகருக்கு பத்து வயது நிரம்பிவிட்டது. துர்கா வீட்டில் நுழைந்ததிலிருந்து எல்லா வீட்டு வேலைகளையும் சேகர் தலையில் சுமத்தி விட்டாள். வீட்டு வேலைகளையும் செய்து கொண்டு பள்ளியிலும் மிக நன்றாக சேகர் படித்து வந்தான். மேற்படிப்பு படிக்க சேகருக்கு மிகுந்த ஆசை இருந்தது.

ஆனால் துர்காவுக்கு சேகரின் மேற்படிப்பில் இஷ்டம் இல்லை. ''இது வரை படித்ததே போதும். உன் தந்தை ஒன்றும் ஜமீன்தார் இல்லை. வயலில் இறங்கி வேலை செய்யப் போகும் உனக்கு மேற்படிப்பு தேவை இல்லை'' என்று இரக்கமின்றி கூறி விட்டாள்.

ஆனால் மருதைக்கும் தன் மகன் நன்றாகப் படித்து முன்னுக்கு வர வேண்டும் என்ற ஆசை இருந்தது. ஆகவே துர்காவிடம் அவனும்

-நரேந்திர தீட்சித்-

மகனுக்கு ஆதரவாக பேசிப் பார்த்தான். ''சேகர் நம்முடைய ஒரே பிள்ளை. மேற்படிப்பு படித்தால் அவனுக்கு நல்லது. தேவையானால் நம் நிலத்தில் பாதியை விற்றாவது அவனைப் படிக்க வைப்போம்,'' என்றவுடன் சீறியெழுந்த துர்கா, ''ஒரு அங்குலம் நிலத்தைக் கூட விற்பதற்கு நான் விடமாட்டேன்,'' என்று கத்தினாள்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, ஒரு நாள் ஒரு ஆள், மருதையை தேடி வந்தான். மருதையின் கைகளில் ஒரு பையைக் கொடுத்து விட்டு அவன், ''ஐயா, நீங்கள் வியாபாரி நீலகண்டனுக்குப் பல ஆண்டுகளுக்கு முன் பத்தாயிரம் ரூபாய் கொடுத்து உதவி செய்தீர்கள். அவர் உங்களிடம் வாங்கிய பணத்தை நன்றியுடன் திருப்பிக் கொடுத்துள்ளார். பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறி விட்டுச் சென்று விட்டான்.

திடீரெனக் கிடைத்த பணத்தினால் பெரும் மகிழ்ச்சியுற்ற மருதை துர்காவிடம் ''என் நிலத்தை விற்று சேகரை படிக்க வைக்க வேண்டிய அவசியம் இல்லை. இதோ, இந்தப் பணம் அவனது மேற்படிப்புக்கு உதவும்'' என்றவுடன் துர்கா அவன் மீது ஒரே பாய்ச்சலில் பாய்ந்து அந்த பணப் பையை அவனிடமிருந்து பிடுங்கிக் கொண்டாள். ''நான் சல்லிக் காசு கூட இதிலிருந்து தரமாட்டேன். என்னுடைய உறவினர் திருமணம் அடுத்த வாரம் நடக்க உள்ளது. இந்தப் பணத்தில் ஒரு சந்திரஹாரம் வாங்கி



திருமணத்திற்கு வந்த அனைவரும் இதைக் கண்டு பிரமிக்கும்படிச் செய்வேன்'' என்றாள்.

இந்த செய்கையினால் மிகுந்த அதிர்ச்சியும், ஏமாற்றமும் அடைந்த தன் தந்தையை நோக்கி, சேகர் ''சித்தியின் விருப்பப்படியே நடக்கட்டும் அப்பா'' என்று சொல்லி விட்டான். அன்று மாலையே துர்கா, மருதையுடன் வாடகைக்கு ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு பக்கத்திலுள்ள ந கரத்தில் ந கைக் கடையில் தனக்குப் பிடித்தவாறு சந்திரஹாரம் வாங்கிக் கொண்டாள்.

நகை வாங்கிவிட்டு தனது கிராமம் திரும்பும் போது அவ ர்கள் பின்னால் வந்து கொண்டிருந்த ஒரு குதிரை வண்டி மின்னல் வேகத்தில் அவர்களைத் தாண்டி முன் சென்றது.



அப்போது அந்த குதிரை வண்டியில் இருந்து ஒரு சிறிய பெட்டி கீழே விழுந்து விட்டது. அதை கவனிக் காமல் குதிரை வண்டியிலுள்ளோர் சென்று விட்டனர். துர்கா உடனே வண்டிக்காரனான ரத்தினத்தை அந்தப் பெட்டியை எடுத்து வரச் சொன்னாள்.

அதைக் கொண்டு வந்த ரத்தினம், துர்காவிடம் பெட்டியைக் கொடுப் பதற்கு முன் அதைத் திறந்து பார்த் தான். ''ஆகா எவ்வளவு அற்புதமான வைரநெக்லஸ்?'' என்று உள்ளிருந்த நகையைக் கண்டு பிரமித்துப் போய்க் கூவினான். அதைக் கேட்ட மாத்திரத் தில் துர்கா ஒரேயடியாய்ப் பாய்ந்து அதை ரத்தினமிடமிருந்துப் பிடுங்கிக் கொண்டாள். ''இதை நானே வைத்துக் கொள்வேன்'' என்று அதிரடியாகக் கூறி விட்டாள். மறுநாள் தற்செயலாக சேகர் வண்டிக்கார ரத்தினத்தை சந்தித்தான். அவனிடமிருந்து நடந்த விஷயங்களைக் கேள்விப் பட்டான். உடனே ரத்தினத்தை நோக்கி, ''இப்படி செய்தது சரியல்ல. நகைக்கு சொந்தக்காரர் யாரோ, அவரிடமே அது மீண்டும் செல்ல வேண்டும். ஆகவே நீ சென்று நம் கிராமத்து நாட்டாமை யிடம் நடந்த விஷயங்களைக் கூறிவிடு'' என்றான் சேகர். ஆனால் ரத்தினம், ''இப்படி செய்வதால் என்ன லாபம்? இதில் ஆபத்துதான் மிஞ்சும். நான்தான் நகையைத் திருடி னேன் என்றுகூட சந்தேகம் வரலாம். எனக்கு ஏன் இந்த பொல்லாப்பு!'' என்று கூறி மறுத்து விட்டான்.

இது நடந்து ஒரு வாரத்திற்குப் பிறகு துர்காவின் உறவினர் வீட்டுத் திருமணம் நடந்தது. ஏற்கனவே வாங்கிய சந்திரஹாரத்துடன், வழி யில் கிடைத்த கண்ணைப் பறிக்கும் வைர மாலையையும் அணிந்து கொண்டு துர்கா திருமண நிகழ்ச்சியில் எல்லோரும் தன் வைர மாலையைக் காணுமாறு ஒய்யாரமாக பவனி வந்தாள். அவள் எதிர்பார்த்தபடியே அவளது நகையைக் கண்ட அனை வரும் அதன் அழகை வானளாவப் புகழ்ந்தனர்.

திருமணத்துக்கு வந்தவர்கள் சாப்பிட அமர்ந்தபோது, ராயபுரம் ஜமீன்தாரின் ஆட்கள் தடதடவென திருமண மண்டபத்துள் நுழைந்தனர். ''எங்கள் ஜமீன்தாரின் நகைகளை சில திருடர்கள் கொள்ளை அடித்து விட்டனர். அவர்களில் சிலர் இங்கே நுழைந்து விட்டதாகத் தோன்றுகிறது.

அ வர்களைப் பிடிக்க வந்துள்ளோம்'' என்று கூறிக் கொண்டே திருமணத் திற்கு வந்திருந்தவர்களை சோதனை இடத் தொடங்கினார்கள். அவர்களில் ஒருவன் துர்கா அணிந்திருந்த வைர நகையைப் பார்த்து விட்டான். உடனே உரத்த குரலில், ''என்ன தைரியம் உனக்கு? எங்கள் ஜமீன் தாரின் நகையைத் திருடியது மட்டும் அல்லாமல், அ தை அ ணிந்து கொண்டும் இருக்கிறாயா? யார் நீ? நீ கொள்ளைக் கூட்டத்தின் தலைவி யா?'' என்று துர்காவை நோக்கி கத்தியபின், அவளைப் பிடித்துக் கொண்டான்.

இதற்குள் ஜமீன்தாரின் மற்ற ஆட்களும் ஓடி வந்து துர்காவை மட்டுமல்லாமல், மருதையையும் பிடித்துக் கொண்டு ஜமீன்தாரிடம் அழைத்துச் சென்றனர். தன் தந்தையும் சித்தியும் ஜமீன்தாரின் ஆட்களிடம் பிடிபட்ட செய்தி அறிந்து சேகர் அதிர்ச்சி அ டைந்து வ ண்டிக்கார ரத்தினத்தையும் அழைத்துக் கொண்டு ஜமீன்தாரிடம் ஓடோடிச் சென்றான். ஜமீன்தாரின் கால்களில் விழுந்து வணங்கி தன் தந்தையும் சித்தியும் குற்றமற்றவர்கள் என்பதை எடுத் துரைத்து நடந்த விஷயங்களை ரத்தினத்தின் வாயிலாக அறியுமாறு வேண்டினான்.

ரத்தினம் ஜமீன்தாரை வணங்கி விட்டு நடந்த விஷயங்களைக் கூறினான். தவிர சேகர் அன்றிலிருந்து இந்த நிகழ்ச்சியை நாட்டாமையிடம் கூறி நகை யை அதன் சொந் தக்



காரரிடம் ஒப்படைக்கச் சொல்லி வற்புறுத்தியதையும் பயத்தினால் தான் அவ்வாறு செய்யாமல் இருந்ததையும் கூறினான். சேகரின் நன்னடத்தை கண்டு ஜமீன்தார் நெகிழ்ச்சி அடைந்தார். ஆனால் ரத்தினம் சொற்படி அன்று சென்று கொண்டிருந்த குதிரை வண்டி தன்னுடையது தான் எனக் கேட்டு குழப்பம் அடைந்தார். ''உண்மையாகவா! அது என்னுடைய குதிரை வண்டியா? வண்டியை ஓட்டியவன் எப்படியிருந்தான்?'' என்றார். ரத்தினம், ''ஐயா, சிவப்புத் தலைப்பாகையுடனும் அடர்ந்த தாடியுடனும் இருந்தான்,'' என்று பதில் அளித்தான். ''ஹா!'' என்று திடுக்கிட்ட ஜமீன்தார் ''அந்த வண்டிக்கார மார்த்தாண்டனை இழுத்து வாருங்கள்,'' என்று உத்தரவிட்டார். மார்த்தாண்டனுக்கு கொடுத்த அடியில், அவன் ஜமீன்தாரிடம் உண்மையை வெளியிட்டான். ''என்னை மன்னித்து விடுங்கள். தங்கள் மைத்துனன் கூறிய ஆசை வார்த்தைகளில் மயங்கி நான்தான் அவன் திருடிய நகைகளையும் அவனையும் ராயபுரத்திலிருந்து ராமாவரத்திற்கு இட்டுச் சென்றேன்'' என்று ஜமீன்தார் கால்களில் விழுந்தான்.

கோபாவேசமடைந்த ஜமீன்தார் உடனே தன் மைத்துனனையும், மார்த்தண்டனையும் அவர்களது குற்றத்திற்காக தண்டனை விதிக்க உத்தரவிட்டார். கூடவே மருதையையும் துர்காவையும் விட்டு விட்டார். அவர்களை நோக்கி, ''உங்கள் மகனது நல்ல குணத்திற்காக, உங்களை விட்டு விடுகிறேன். பெண்களுக்கு பொன் மேலும் ஆபரணங்கள் மேலும் ஆசை ஏற்படுவது இயற்கை. ஆனால் துர்காவுக்கு உள்ளது போல் பேராசையாக மாறக் கூடாது,'' என்று அறிவுரை கூறியதோடு நிற்காமல் சேகருடைய மேற்படிப்புக்கான உதவியைத் தானே செய்யவும் முன் வந்தார். மனம் திருந்திய துர்காவும் அன்றிலிருந்து அவ்வாறு தவறு செய்யமாட்டேன் என்று உறுதி பூண்டாள்.





# மாய மந்திரவாதி

## 8

*(தன்னைத் துரத்தி வந்த மாயக்கரடியிடமிருந்துத் தப்பிக்க முயற்சித்த துன்முகன் தன் எதிரே வந்த அரக்கன் உக்கிரதண்டனைப் பார்த்து அதிர்ச்சியில் மயக்கம் அடைந்து விழுந்து விட்டான். உக்கிரதண்டன் துன்முகனின் மெய்க்காப்பாளனைத் தண்ணீர் கொண்டு வரச் சொல்ல, மெய்க்காப்பாளன் தண்ணீர் எடுக்கக் குளத்திற்குச் சென்றான். அப்போது தும்பிக்கை அறுந்த யானை அவனைப் பார்த்து ஆவேசத்துடன் ஓடி வந்தது. அதன் பிறகு...)*

**து**ம்பிக்கை அறுந்த யானை ஆவேசத்துடன் ஓடி வருவதைக் கண்ட உக்கிரதண்டன் மாயக் கரடியை நோக்கி, ''இதுவா உன்னுடைய வாகனம்! பார்த்தால் சாதாரணக் காட்டு யானை போல் அல்லவா தோன்றுகிறது?'' என்று கேட்டான். ''ஆம்,'' என்ற கரடி, ''இது காட்டில் இருந்த யானைதான். வழியில் என்னைத் தடுக்க இது முயற்சி செய்த போது நான்தான் என் கோடாலியால் இதன் தும்பிக்கையை வெட்டி, இதன் மீது ஏறி சவாரி செய்து வந்தேன்,'' என்று சொல்லி முடித்தது.

இதற்குள் யானை அவர்களுக்கு அருகே வந்து விட்டது. அதைக் கண்டு பயந்த நாகமல்லனும் அவனுடைய சகாக்களும் மீ ண்டும் கு கையை நோக்கி ஓட்டம் பிடித்தனர். இதற்குள் மயக்கம் தெளிந்து எழுந்த துன்முகனும் யானையைக் கண்டு ஓடத் தொடங்கினான். மெய்க்



காப்பாளன் ஓடிப் போய் உக்கிர தண்டன் பின்னால் ஒளிந்து கொண்டான். இடி முழக்கக் குரலில் உக்கிரதண்டன் அவனிடம், ''அடேய், நீ என்னுடைய மெய்க் காப்பாளனாக இருக்க விரும்பு வதாகச் சற்று முன்தான் சொன்னாய். இப்போது நான்தான் உனக்கு மெய்க் காப்பாளன் என்று தோன்றுகிறது. தூ, தொடை நடுங்கிக் கோழையே!'' என்று கத்திவிட்டு சற்றே ஒதுங்கிக் கொண்டான்.

இப்போது மாயக்கரடி தன் கோடாலியை சுழற்றிக் கொண்டே யானையின் முன் வந்து, ''நில். என்னைத் தெரியவில்லை?'' என்று கேட்க யானை சற்றும் எதிர்பாராமல் மாயக்கரடியையேத் தூக்கி எறிய முயன்றது. சட்டென்று உக்கிர தண்டன் யானையின் மீது தாவி ஏறி, தன்னுடைய கதாயுதத்தால் ஓங்கி யானைக்கு ஓர் அடி கொடுத்தான். அடி விழுந்த வேகத்தில் யானை மாயக்கரடியை தரையில் தொப் பென்று போட்டு விட்டு தானும் கீழே சரிந்து விழுந்தது. உக்கிரதண்டன் யானையின் கால்களை அழுத்திப் பிடித்துக் கொண்டு மெய்க் காப்பாளனை நோக்கி யானையின் கால்களைக் கட்டுவதற்கு ஏதாவது காட்டில் வளர்ந்த கொடி கொண்டு வரச் சொன்னான்.

தரையில் விழுந்து கிடந்த மாயக்கரடி மெதுவாக சமாளித்துக் கொண்டு எழுந்து நின்று உக்கிர தண்டனை நோக்கி, ''என்னுடைய கோடாலியை விட உன்னுடைய கைகளுக்கு பலம் அதிகம் எனத் தோன்றுகிறது. என்னை யானை இடமிருந்து காப்பாற்றியதற்கு நன்றி. உனக்கு என்ன வேண்டுமோ, கேள்! நான் தருகிறேன்,'' என்றது.

உக்கிரதண்டன் புன்னகையுடன் கரடியை நோக்கி, ''எனக்கு ஏதாவது கேட்பதானால், உன்னுடைய குரு வான மாய மந்திரவாதியிடம் தான் கேட்க வேண்டும. அதற்குமுன் நீயும் வந்து இந்த யானையின் கால்களை பிடித்துக் கொள்'' என்றான்.

ஆனால் கரடியோ, ''என்னை என்னவென்று நீ நினைத்தாய்! கேவலம் என்னுடைய வாகனத்தின் கால்களையா நான் பிடித்துக் கொள்ள வேண்டும். என்னிடமே வேலை காட்டிய இந்த யானையின் தலையை நூறு துண்டங்களாக சீவி விடு கிறேன்'' என்று கோபத்துடன் கூறிக் கொண்டே தன் கோடாலியை

எடுத்தது. ''அடேய் நிறுத்து,'' என்று தடுத்த உக்கிரதண்டன். ''உன்னுடைய கடமையை மறந்தாயா? இந்த யானையைக் கொன்றுவிட்டால் நீ எப்படி துன்முகனைத் துரத்துவாய்?'' என்றான்.

உடனே சட்டென்று துள்ளிக் குதித்த கரடி, ''அடடா, சரியாகச் சொன்னாய். அந்த துன்முகன் எங்கே? இங்கேதானே மயக்கமாக விழுந்திருந்தான்!'' என்று சுற்றும் முற்றும் துன்முகனைத் தேடியது. இதற்குள் கீழே விழுந்து கிடந்த யானை உக்கிரதண்டனின் பிடியிலிருந்துத் தப்பித்துக் கொள்ள முயன்றது. ''அடேய் மெய்க்காப்பாளா! எங்கே தொலைந்தாய் நீ? காட்டிலிருந்து கொடி கொண்டு வர இத்தனை நேரமா?'' என்று உக்கிரதண்டன் கத்தினான். ''இதோ வந்து விட்டேன்'' என்று கூவிக் கொண்டே நாகமல்லன் கயிறுடன் அங்கே வந்தான். அவனை யானையின் கால்களைக் கட்டச் சொல்லி உத்தரவிட்ட உக்கிரதண்டன் ''சபாஷ், தேவையான பொருட்கள் எல்லாம் தயாராக வைத்திருக்கிறீர்களே!'' என்று நாகமல்லனைப் பாராட்டினான்.

நாகமல்லன் பணிவுடன், ''உக்கிர தண்டரே! நீங்கள் எங்களது கோரிக்கை ஒன்றை நிறைவேற்ற வேண்டும்'' என்றான். உக்கிரதண்டன், ''தாராளமாகச் செய்கிறேன். இந்த மாயக் கரடியை ஏவி உங்கள் மூவரின் தலையைச் சீவ வேண்டும். அது தானே உங்கள் விருப்பம்?'' என்றான்



கேலியாக. அதைக் கேட்டவுடன் பயத்தில் நடுங்கிய நாகமல்லன் ஏதோ பதில் செ சால்ல மு யற்சிக்கையில் கரடி, ''அடேய் திருட ர்களா! துன் முகன் எங்கே? உடன் சொல்லா விட்டால், உங்கள் தலைகளை இப்போதே சீவி விடுவேன்'' என்று கோடாலியைக் கையில் எடுத்துக் கொண்டது. நாகமல்லன் மாயக் கரடியைக் கும்பிட்டு ''எங்களை ஒன்றும் செய்துவிடாதே. மயக்கமடைந்த துன்முகன் இங்குதான் எங்காவது இருப்பான்'' என்றான்.

''அடேய், அதைத்தான் நானும் கேட்கிறேன். அவனைக் கொன்று அவன் தலையை எடுத்துக் கொண்டு செல்லாவிட்டால் மந்திரவாதி என் தலையை சீவி விடுவார்'' என்றது மாயக்கரடி. நாகமல்லனின் ஆட்கள் இதற்குள் யானையின் முன்னங் கால்களை கயிற்றினால் பிணைத்து



விட்டனர். மெய்க்காப்பாளனும் காட்டுக் கொடிகளுடன் அந்த நேரம் வந்து சேர்ந்தான். அந்தக் கொடி களைக் கொண்டு நாகமல்லனின் ஆட்கள் யானையின் பின்னங்கால் களைக் கட்ட முயன்றனர். உக்கிர தண்டன் மெய்க்காப்பாளனை நோக்கி ''அடேய், எங்கே உன்னுடைய மன்னன்! நீ எங்காவது அவனை ஒளித்து வைத்து விட்டாயா?'' என்று கேட்க மெய்க்காப்பாளன் பணி வுடன், 'மகாராஜா, நான் உங்கள் மெய்க்காப்பாளன் ஆகிவிட்டேன். துன்முகனைப் பற்றி எனக்குத் தெரி யாது'' என்றான்.

மாயக்கரடி கோபத்துடன், ''பொய்யா சொல்கிறாய்! துன்முகன் எங்கே என்ற உண்மையைக் கூறா விட்டால் உன் தலை தரையில் உருளும்'' என்று உறுமியது. மெய்க் காப்பளன் உக்கிரதண்டனின் பின்னால் ஒளிந்து கொண்டு, ''மகா ராஜா, என்னை நீங்கள் தான் காப்பாற்ற வேண்டும்'' என்று கெஞ்சி னான். பின்னால் ஒளிய முயன்ற மெய்க்காப்பாளன் கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிட்ட உக்கிர தண்டன், ''உண்மையைச் சொல். நீ காட்டுக் கொடி கொண்டு வரச் சென்ற போது தப்பி ஓடிய துன்முகனைக் கட்டாயம் பார்த்திருக்கிறாய். அவனுடன் ஏதோ சதி ஆலோசனை செய்து அவனைத் தப்பிக்கவிட்டு நீ மட்டும் ஒன்றும் தெரியாதவன் போல் எங்கள் முன் நடிக்கிறாய். இல்லையா?'' என்று கத்தினான் உக்கிரதண்டன்.

''ஐயா, என்னை விட்டுவிடுங் கள்'' என்று அலறிய மெய்க்காப் பாளன் ''உக்கிரதண்ட மகாராஜா! உண்மையைச் சொல்லி விடுகிறேன். துன்முகன் தன்னை எப்படியாவது உங்களிடமிருந்துத் தப்பித்துக் கொள்ள உதவி செய்தால் நாட்டில் பாதியை எனக்குக் கொடுத்து விடு வதாக வாக்குறுதி அளித்திருக்கிறார். அவர் இங்கிருந்து ஓடிவிட்டார்'' என்றான். ''அடேய் முட்டாள்'' என்று பலமாக சிரித்தவாறே கூவிய உக்கிரதண்டன், ''அவன் சொன்னதை நீ அப்படியே நம்பிவிட்டாயா? துன்முகனைப் பற்றித் தெரிந்ததும் அவன் வார்த்தைகளை நம்பும் உன்னைப் போன்ற முட்டாளை நான் பார்த்ததேயில்லை. அப்படியே நாங்கள் உன்னை தப்ப விட்டு நீ உதயகிரிக்குத் திரும்பிச் சென்றால் உனக்கு நாட்டில் பாதி கிடைக்காது.

கழுத்துக்குத் தூக்குக் கயிறுதான் கிடைக்கும்,'' என்றான். உடனே மெய்க்காப்பாளன், 'ஐயா உக்கிர தண்டரே, எனக்கு நாடும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். என் உயி ர்தான் வேண்டும். நான் உங்களுடனே இருந்து விடுகிறேன்'' என்று காலில் விழுந்து வணங்கினான்.

ஆனால் கரடி கோபத்துடன் தன் கோடாலியை உயர்த்தி ''வீண் பேச்சை நிறுத்துங்கள். துன்முகனை உயிருடன் என்முன் கொண்டு வந்து நிறுத்தும் பொறுப்பு உங்களைச் சார்ந்தது. தவறினால் உங்கள் அனை வரது தலைகளையும் கொய்து என் கழுத்தில் மாலையாக அணிந்து கொள்வேன்'' என்று எரிமலை போல் வெடித்தது. இதைக் கேட்ட உக்கிர தண்டனும் கோபத்துடன் ''கரடியாரே நிறுத்து உன் கூச்சலை'' என்று உறுமினான்.

மாயக் கரடிக்கு பொறுக்கமுடியாத சினம் உண்டாயிற்று. ''உக்கிர தண்டா, வீணாக என்னுடன் வாக்கு வாதம் செய்யாதே. மந்திரவாதியின் ஆயுதமான இந்தக் கோடாலியின் சக்தியைப் பற்றி உனக்குத் தெரியாது. உன்னுடைய கதையைக் கூட இது சுக்கு நூறாக்கிவிடும். பார்க்கிறாயா?'' என்று சவால் விட்டது.

உடனே உக்கிரதண்டன், ''கரடி யாரே! சற்று பொறுமையாயிருங்கள். நாம் இருவரும் இப்படி ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டால், நீ வந்த வேலை என்ன ஆகும்?'' என்று கேட்டான். ''நீ சொல்வது சரி. ஆனால் துன்முகன் இப்போது



தப்பித்து விட்டானே! அவனை மீண்டும் எப்படி பிடிப்பது?'' என்றது கரடி.

''அதைப் பற்றி கவலைப் படாதே! நாமெல்லோரும் அவனைத் தேடிக் கண்டு பிடிப்போம் வா,'' என்றான் உக்கிரதண்டன். பிறகு அனைவரும் சேர்ந்து மும்முரமாக உக்கிரதண்ட னைத் தேடத் தொடங்கினர். அப் போது சற்று தூரத்தில் யாரோ கூக் குரலிடும் ஒலி கேட்டது. ''சீக்கிரமாக அம்பைச் செலுத்து. என்னை நீ காப்பாற்றினால் என் நாட்டில் பாதி உனக்குத் தருவேன். நான் தான் மன்னன் துன்முகன்'' என்று துன்முகன் கத்தும் குரல் கேட்டது. எல்லோரைக் காட்டிலும் மெய்க் காப்பாளன் மிகவும் உணர்ச்சி வசப் பட்டான். ''எனக்கு பாதி நாட்டைக் கொடுப்பதாக வாக்குக் கொடுத்து விட்டு, இப்போது துன்முகன் வேறு

யாருக்கோ தரப் போகிறான். நான் இதை விடமாட்டேன்,'' என்று கத்திக் கொண்டு குரல் வந்த திசையை நோக்கி ஓடினான்.

அங்கு சென்றதும் அவன் கண்ட காட்சி அவனை திகைப்பில் ஆழ்த்தியது. தன்னைத் துரத்தி வந்த ஒரு சிறுத்தையிடமிருந்து தப்பிக்க முயன்று துன்முகன் ஒரு மரத்தின் மீது அமர்ந்திருந்தான். கீழே ஒரு வேடன் வில் அம்புகளுடன் நின்று கொண்டிருந்தான். தனது மெய்க்காப்பாளனைக் கண்டவுடன் துன்முகன் உற்சாகத்துடன், ''சபாஷ், சரியான சமயத்தில் வந்தாய். அந்த சிறுத்தையை நீ கொன்று விடு'' என உத்தரவிட்டான். ஆனால் மெய்க்காப்பாளனோ துன்முகனை நோக்கி, ''அரசே, இந்த சிறுத்தையிடமிருந்து தங்களைத் தப்பவைத்தால் நாட்டில் பாதியைக் கொடுத்து விடுவீர்களா?'' என்றான்.

''அடேய், நான் சொல்லி விட்டேனே கொடுப்பேன் என்று! ஏன் நேரம் கடத்துகிறாய்! அந்த சிறுத்தையைக் கொல்,'' என்று துன்முகன் கத்தினான். ''அரசே, நீங்கள் சொல்வது ஆச்சரியமாக உள்ளது. இந்த வேடனுக்குப் பாதி எனக்கு பாதி நாட்டை கொடுத்து விட்டால், அப்புறம் உங்கள் பங்கு என்ன ஆகும்?'' என்று கேட்டான் மெய்க்காப்பாளன். ''பேசுவதற்கு இதுவா நேரம்? எனக்கு இந்த சமயம் என் உயிர்தான் முக்கியம். சீக்கிரம் அந்த சிறுத்தையைக் கொல்'' என்று கூவினான் துன்முகன்.

''எனக்கு நீங்கள் தரும் நாடு தேவையில்லை. ஐந்து காசுகள் கொடுத்தால் போதும். இதோ, அந்த சிறுத்தையைக் கொல்கிறேன்,'' என்ற வேடன் சிறுத்தையின் மீது குறி பார்த்து அம்பு எய்தான். அந்த அம்பு குறி தவறாமல் சிறுத்தையின் மீது பாய, அது பயங்கரமாக உறுமியது. இந்த சமயம், அந்த ஒலியில் திடுக்கிட்டு தன் பிடியை நழுவ விட, துன்முகன் மரத்திலிருந்து தலைகுப்புற சிறுத்தையின் மேல் போய் விழுந்தான்.

(தொடரும்)





நவீன வேதாளக் கதை

# தர்மம் தலை காக்கும்

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலை வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி, அவன் அதைத் தூக்கிக் கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில், அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''விக்கிரமா! நீ இப்படி கடினமாக உழைப்பதின் காரணம் எனக்குத் தெரியவில்லை. ஏதோ உதவி செய்வதாக எண்ணிக் கொண்டு இப்படி இயலாத ஒரு காரியத்தை நீ செய்ய வேண்டும் என்பது உன் தலையெழுத்து போல் இருக்கிறது. இப்படித்தான் பிறருக்கு உதவி



செய்வதாக நினைத்துத் தன்னையும், தன்னுடைய மகனையும் பெரும் ஆபத்தில் ஆழ்த்திய பரமேஸ்வரன் கதை நினைவுக்கு வருகிறது. அந்தக் கதையைச் சொல்கிறேன் கேள்'' என்றது.

ஜகந்நாதபுரத்தில் பரமேஸ்வரன் என்ற ப ரோபகாரி இ ருந்தான். பிறருக்குப் பொருள் உதவி செய்தே தன் சொத்துக்களை எல்லாம் அழித்து விட்டான். சாகும் தருணத்தில் தன் பிள்ளையைக் கூப்பிட்டு ''மகனே நான் உனக்கு துரோகம் செய்து விட்டேன். எனக்கு இப்போது இருக்கும் அற்பசொத்தை விட கடனே அதிகம். ஆனாலும் நீ பிறருக்கு உதவி செய்வதை நிறுத்தக் கூடாது. உன்னுடைய தாயை ஒரு குறையுமில்லாமல் பார்த்துக் கொள். உனக்கு ஏதாவது உதவியோ, அறிவுரையோ தேவையெனில், நமது கிராமத்துப் பூசாரியான ராமானந்தரைக் கேள். பரோபகாரத்தின் மகிமையை எனக்கு எடுத்துரைத்த மகான் அவர்'' என்று சொல்லி உயிர் நீத்தான்.

பரமேஸ்வரன் இறந்ததும், அவன் மகன் அர்ஜுனன் எதிர்பாராத கஷ்டங்களுக்கு உள்ளானான். கொஞ்ச நஞ்சம் இருந்த சொத்துக்களை கடன்காரர்கள் எடுத்துக் கொண்டு போனார்கள்.

தன் தந்தை சொன்னது ஞாபகம் வர தனது கஷ்டங்களில்இருந்து விடுபட ஆலோசனை கேட்க அவன் பூசாரி ராமானந்தரிடம் சென்றான். அவனை அன்புடன் வரவேற்ற பூசாரி, ''உன் தந்தை செய்த தான தருமங்களின் புண்ணியம் உன்னைக் காப்பாற்றட்டும்'' என்று வாழ்த்து கூறினார்.

''தருமமாவது புண்ணியமாவது! என் தந்தை இவற்றால் என்ன நன்மை அடைந்தார் என்று தெரியவில்லை'' என்றான் அர்ஜுனன் சலிப்புடன்.

''அப்படிச் சொல்லாதே தம்பி. உன்னுடைய தந்தையைப் பற்றி உனக்குத் தெரியாது. சிறுவயதில் இருந்தே ஒரு கொடிய நோயினால் உன் தந்தை அவதிப் பட்டுக் கொண்டிருந்தார். உடம்பில் முள் குத்தினால் எப்படி வலிக்குமோ, அப்படி வலித்துக் கொண்டேயிருக்கும். அந்த நோய் கண்டவர்கள் நாளுக்கு நாள் மெலிந்து விரைவிலேயே உயிர் துறப்பது வழக்கம். உன் தந்தை செய்த தான தருமங்கள் தான் அவரை

இத்தனை ஆண்டுகள் உயிர் வாழச் செய்துள்ளது,'' என்றார். ''இதை எல்லாம் நான் நம்பத் தயாராக இல்லை,'' என்றான் அர்ஜுனன். ''தம்பி, நான் சொல்வதை நம்ப வில்லையானால், நீ நமது மருத்துவர் ரகுநாதனைச் சென்று பார். அவர் உண்மையை உனக்குச் சொல்வார்,'' என்றார்.

உடன் அர்ஜுனன் மருத்துவரை நாடிச் சென்று தான் வந்த காரியத்தை சொன்னான். மருத்துவர், ''தம்பி, உன் தந்தையின் நோய்க்கு மருத்துவத் துறையில் மருந்தே கிடையாது. அவர் செய்த தான தருமங்கள் தான் அவரை நீண்ட நாள் நலமாக வாழ வைத்தது'' என்றார்.

அப்போது அர்ஜுனனுக்கு ராமானந்தரின் வார்த்தைகளில் நம்பிக்கை உண்டாகத் தொடங்கியது. உடனே பூசாரியிடம் சென்று, ''நீங்கள் சொன்னதை இப்போது நம்புகிறேன். இப்போது நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்'' என்றான். ராமானந்தர் அதற்கு ''தம்பி இந்த விதைகளைப் பெற்றுக் கொள். இவற்றை நட்டால் ஒரே நாளில் செடி முளைத்து ஒரே வாரத்தில் மரமாகி விடும். மனிதர்களுக்கு நிழலும் பறவைகளுக்கு இருப்பிடமும் கொடுக்கும். இவற்றை எங்கு நடுவது என்பதை நீ தீர்மானித்துக் கொள். இதுதான் பரோபகாரம் என்பது. இதனால் உனக்கு நன்மை உண்டாகும்,'' என்றார். அந்த விதைகளை எடுத்துச்



சென்ற அர்ஜுனன் தன்னுடைய கிராமத்தில் இருந்து அடுத்த கிராமத்திற்குச் செல்லும் சாலையில் மரங்களே இல்லாத ஓரிடத்தில் ஒரு விதையை நடுவதற்காகக் குழி தோண்டத் தொடங்கினான். முதல் குழியைத் தோண்டும் போதே அவனுக்கு பூமிக்குள்ளிருந்து ஒரு தங்க நாணயம் கிடைத்தது. அந்த நாணயத்தில் ஒரு பக்கம் விஷ்ணுவின் உருவமும் மற்றொரு பக்கம் லட்சுமியின் உருவமும் பொறிக்கப் பட்டு இருந்தன. ''ஆகா, கைமேல் பலன் கிடைத்து விட்டது'' என்று மகிழ்ச்சியுடன் அடுத்த கிராமத்திற்குச் சென்றான்.

அங்குள்ள ஒரு தெருவில் சென்று கொண்டிருக்கையில் ஒரு வீட்டுக் காரன் வெளியே வந்து அர்ஜுனனை



திடீரெனப் பிடித்துக் கொண்டான். ''யார் நீ? திருடன் போல் தோன்று கிறாய். உன்னை சோதனை செய்ய வேண்டும்,'' என்று சொல்லி அவனைப் பிடித்து சோதனையிட் டான். அர்ஜுனனிடம் சில விதை களும் ஒரு தங்கக் காசும் இருந்ததைப் பார்த்து விட்டான்.

தங்கக் காசைப் பார்த்தவுடன் அவன் 'ஆகா! இது எனது பூஜை அறையில் வைத்திருந்த தங்கக் காசு. ஆறு மாதம் முன்பு திருடுப் போய் விட்டது. நீ தான் அதைத் திருடிய வன்'' என்று அவனை கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். அக்கம் பக்கத் தினரும் சூழ்ந்து கொண்டு அவனைத் திருடன் என்று ஏசினர். அவர்களைக் கையெடுத்துக் கும்பிட்டவாறு துயரம் ததும்பிய குரலில் அர்ஜுனன் ''ஐயா, நான் பரோபகாரியான பரமேஸ்வர னின் பிள்ளை. என்னுடைய ஊர் ஜகந்நாதபுரம். என்னைத் திருடன் என்று சொல்லாதீர்கள்'' என்று தன் முழுக்கதையையும், பொற்காசு தனக்குக் கிடைத்த விவரத்தையும் விளக்கிக் கூறியதைக் கேட்டதும் அவர்களுடைய மனம் இளகியது. தவிர பரமேஸ்வரனின் தயாள குணத்தைப் பற்றி ஏற்கனவே கேள்விப் பட்டிருந்த அவர்கள் தாங்கள் தான் அர்ஜுனனைத் தவறாகப் புரிந்து கொண்டோம் என வருந்தினர். அது மட்டும்இல்லாமல் அவனது தந்தையின் நோயைப் பற்றியும் அவரது தானதருமங்கள் அவரைக் காத்ததையும் அறிந்து கொண்ட பிறகு அவனை உடனே அந்த ஊர் ஜமீன்தாரைச் சென்று சந்திக்க அறிவுரை வழங்கினர்.

ஜமீன்தாருக்கு ராதிகா என்ற பதினாறு வயதில் ஒரு பெண் இருப்ப தாகவும், அர்ஜுனனின் தந்தைக்கு இருந்ததைப் போலவே அவளுக்கும் நோய் இருப்பதாகவும் அவள் இன்னும் ஒரு மாதம்தான் உயிரோடு இருப்பாள் என்றும் கூறினார்கள்.

ஒரு மருத்துவர் மட்டும் அவள் பிழைப்பதற்கு ஒரேயொரு வழி இருப்பதாகக் கூறியுள்ளாராம்.

ஓர் அபூர்வ மரம் உள்ளதாம். அதன் விதையை நட்டு ஒரு நாளில் அது செடியாகவும் ஒரே வாரத்தில் பெரிய மரமாகவும் ஆகும் சக்தி அதற்கு உண்டு. அந்த மரங்கள் அடர்ந்த தோட்டத்தில் ஜமீன்தார் மகள் ராதிகா

ஒய்வு எடுத்துக் கொண்டால் ஒரே நாளில் அந்த மரங்களின் காற்று பட்டு குணமாகி விடும் என்றும் அந்த மருத்துவர் கூறியுள்ளார். ஆனால் நூறு மரங்கள் தேவையாம். இந்த விவரங்களை எடுத்துச் சொன்னவர்கள் ''அர்ஜுனா! அந்த அபூர்வ விதைகள் உன்னிடம் உள்ளன. நீ இப்போதே அவர் வீட்டுக்குச் செல்,'' என்றனர்.

அதன்படியே அர்ஜுனன் ஜமீன்தாரை சென்று சந்தித்தான். தன் மகளை குணமாக்கக் கூடியவன் அவன் என்று தெரிந்ததும் ஜமீன்தார் மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தார். உடனே தனது பெரிய தோட்டத்தைக் காட்டி அங்கு விதைகளை நடச் சொன்னார். அர்ஜுனன் உற்சாகமாக நடத் தொடங்கினான். ஆனால் என்ன துரதிருஷ்டம்! நூறு விதைகளில் ஒன்று குறைந்திருந்தது. நூற்றில் ஒரு மரம் குறைந்தாலும் பலனில்லை என மருத்துவர் கூறிவிட்டார். அர்ஜுனன் உடனே பூசாரிக்கு இன்னும் விதைகள் இருந்தால் அனுப்பச் சொல்லித் தகவல் அனுப்பினான். ஆனால் அவரிடம் வேறு இல்லை. என்ன செய்வது?

இதற்குள் ஒரு யோகி ஜமீன்தாரின் கஷ்டத்தைத் தீர்க்க முன் வந்தார். ராதிகாவின் நோயை யார் ஒருவர் சுயநல எண்ணமேயின்றி ஏற்றுக் கொள்கிறார்களோ அவரை இந்த நோய் பிடிக்கும். ராதிகா குணமாகி விடுவாள் என்றார். இதைக் கேட்டதும் முதலில் ஜமீன்தாரரும் அவர் மனைவியும் முன் வந்தனர்.



ஆனால் அவர்களது மனதை சோதித்த யோகி "மன்னிக்க வேண்டும். நீங்கள் முழு மனதுடன் இதைச் செய்யவில்லை. ஆகையால் உங்களுக்கு மாற்ற முடியாது'' என்று சொல்லி விட்டார். அடுத்து அர்ஜுனன் தானே முன் வந்தான். அவனை சோதித்த யோகி, திருப்தி அடைந்து ராதிகாவின் நோயை அர்ஜுனனுக்கு மாற்றி விட்டார். உடனே ராதிகா பூரண குணமடைய அர்ஜுனனை அந்த விசித்திர நோய் தாக்கியது.

ஒரே வாரத்தில் அர்ஜுனன் நட்ட விதைகள் மரங்களாயின. அந்த மரங்களின் நிழலில் தங்கிய ஒரே நாளில் அனைவரும் வியப்படையும்படி அர்ஜுனன் குணம் அடைந்து விட்டான். மனம் மகிழ்ந்த ஜமீன்தாரும் தன் மகளை அர்ஜுனனுக்கு

மணமுடித்து வைத்தார். இந்த இடத்தில் கதையை நிறுத்திய வேதாளம் விக்கிரமனை நோக்கி, ''விக்கிரமா! பரோபகாரம் செய் வதினால் நன்மைகளை விட, கஷ்டங்களே அதிகம் உண்டாகிறது பார்த்தாயா? பரமேஸ்வரன் தான தர்மங்கள் செய்ததினால் நோயில் இருந்து விடுபட்டாலும் தன் சொத்துக்களை இழந்து ஏழை யானான். அவன் மகன் அர்ஜுனன் ஜமீன்தார் மகளுக்கு உதவி செய்யப் போய் தன் உயிரையை இழக்கக் கூடிய ஆபத்தில் ஆழ்ந்தான். ஆகை யால் பிறருக்கு உதவி செய்வதால் என்ன நன்மை? நூறு விதைகளில் ஒன்று குறைந்தும் அர்ஜுனன் எவ்வாறு நோய் நீங்கப் பெற்றான்? ராதிகாவின் பெற்றோர்களுக்கு அவளுடைய நோயை யோகி ஏன் மாற்றவில்லை? இந்தக் கேள்வி களுக்கு பதில் தெரிந்ததும், நீ மௌன மாக இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது. உடனே விக்கிரமன் ''பரோபகாரிக்கு தொடக் கத்தில் கஷ்டங்கள் நேர்ந்தாலும் இறுதியில் எல்லாம் நன்மையாகவே முடியும். பரமேஸ்வரன் சொத்துக் களை இழந்தாலும் கொடிய நோய் நீங்கப் பெற்று நலமாக இருந்தான். அதே போல் அர்ஜுனனும் தொடக்க த்தில் பல கஷ்டங்களை அனுப வித்தாலும் இறுதியில் ஜமீன்தார் மகளை ம ணந்து ந லமாகவே இருந்தான். ஆகவே பரோபகாரம் செய்வதால் கஷ்டங்கள் மட்டும் உண்டாகிறது என்பது உண்மை இல்லை. தவிர அர்ஜுனனின் பரோப கார உள்ளத்திற்காக நூறு விதைகளில் ஒன்று கு றைந்தாலும் அ தனால் பாதகம் எதுவும் ஏற்படவில்லை. ராதிகாவின் நோயைத் தான் ஏற்றுக் கொள்ள அவன் பெற்றோர்கள் முன் வந்தது பரோபகாரத்துக்காக இல்லை சுயநலத்துக்காக ஆகவே தான் யோகி அவர்களின் செயலை ஏற்கவில்லை'' என்றான்.

விக்கிரமனின் இந்த சரியான பதிலால் அவனது மௌனம் கலைய வே, வேதாளம் அவன் சுமந்து வந்த உடலோடு மீண்டும் முருங்கை மரம் ஏறிக் கொண்டது.






# பெண் கூலிகள்



ஒரு காலத்தில் குஜராத் மாநிலத்தில் பவநகர் என்னும் இடத்தை ஆண்டு வந்தவர் தனது அரண்மனையில் ஏராளமான ஆண் வேலைக்காரர்களை வேலைக்கு அமர்த்தி இருந்தார். முதன் முதலாக இரயில் வண்டிகள் ஓடத் தொடங்கி பவநகரில் இரயில் நிலையம் ஏற்படுத்தப் பட்டதும், பெண்கள் கூலிவேலை செய்ய உத்தரவு இடப்பட்டது. இன்னும் இந்தியாவில் பவநகர் ஒரு இடத்தில் மட்டும் இரயில் நிலையத்தில் பெண் கூலிகள் வேலை செய்கின்றனர்.

# ஆமை புகுந்த வீடு

இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் உள்ள மிசோராம் மாநிலத்தில் உள்ள கிறிஸ்தவர்கள் தங்கள் மதம் தோன்றி நூறு ஆண்டுகள் நிறைவு பெற்றதை கோலாகலமாகக் கொண்டாடினர். இந்தக் கொண்டாட்டத் திற்கென ஒரு பெரிய மத்தளத்தை உண்டாக்க மிசோராமிலேயே ஒரு பெரிய மரமாகப் பார்த்து அதனை வெட்டினர். அப்போது மரத்தின் உட்புறம் பெரிய துவாரம் தென்பட்டது. அந்த துவாரத்துக் குள்ளிருந்தது ஒன்றல்ல. இரண்டல்ல பத்து ஆமைகள் வெளி வந்தன. இத்தனை ஆண்டுகள் அந்த மரப் பொந்திலா அவை வசித்து வந்தன!



## காஷ்மீர் நாட்டுப்புறக் கதை

# அரசாங்க வேலை

**ப**ல ஆ ண்டுகளுக்கு மு ன், காஷ்மீரின் தலைநகரான ஸ்ரீ நகரில் நித்யானந்த் என்ற பணக்கார வாலிபன் வசித்து வந்தான். அவனுடைய தந்தை ஏராளமான செல்வமும் நிலங்களும் விட்டுச் சென்றிருந்தார். நிலங்களைக் குத்தகைக்கு விட்டு, அதில் கிடைத்த வருமானத்தைக் கொண்டு தன் மனைவி ம க்களுடன் நித்யானந்த் சொகுசான வாழ்க்கை நடத்தி வந்தான். வே று வே லை எ துவும் செய்ய வேண்டிய தேவையே அவனுக்கு இல்லாமல் இருந்தது.



நித்யானந்தின் பக்கத்து வீட்டில் சோம்நாத் என்பவன் வசித்து வந்தான். அரசாங்கத்தில் வருவாய் துறையில் வேலை செய்து கொண்டு இருந்த அவனுக்கு மற்றபடி விசேஷத் திறமைகள் எதுவும் இல்லை. ஆனாலும் சுற்று வட்டாரத்தில் அவனது அரசுப் பணியை ஒட்டி, அவனுக்கு நல்ல செல்வாக்கு இருந்து வந்தது. இதைப் பற்றியெல்லாம் அவ்வளவாக பொருட்படுத்தாமல் இருந்த நித்யானந்த் ஒரு நாள் தன் எண்ணத்தை மாற்றிக் கொள்ளும் சந்தர்ப்பம் வந்தது.

ஒருநாள் நித்யானந்தின் பிள்ளைக்கும் சோம்நாத்தின் பிள்ளைக்கும் விளையாட்டில் ஏதோ தகராறு ஏற்பட, அது பெரியதாக வளர்ந்து, பிள்ளைகளின் தாயார்கள் இருவரும் சண்டையிட முற்பட்டனர்.

சோம்நாத்தின் மனைவி காந்தா உரத்த குரலில் நித்யானந்தின் மனைவி ராதாவை நோக்கி ''என்னிடமா சண்டை போடுகிறாய்? உன்னையும் உங்கள் குடும்பத்தையும் என்ன செய்கிறேன் பார்! என் கணவர் அரசாங்க வேலையில் இருப்பவர். உன் புருஷனைப் போல் வெட்டிப் பொழுது போக்கும் உதாவாக்கரை இல்லை'' என்று கத்தி விட்டுச்

சென்றாள். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு தன் மனைவி காந்தாவின் தூண்டு தலால் சோம்நாத் நித்யானந்துக்கு பல விதங்களில் இடையூறுகள் செய்யத் தொடங்கினான். அவன் வரிப்பணம் ஒழுங்காக செலுத்தவில்லை என்று போலியாகக் குற்றம் சாட்டி அவனை அலுவலகங்களில் அங்கும் இங்கும் அலையச் செய்தான்.

இப்படி பலவாறு இன்னல்களுக் காளான நித்யானந்தை நோக்கி அவன் மனைவி, ''நீங்கள் ஏதும் வேலை செய்யாமல் சும்மாயிருப்பதால்தான் நம்மை இப்படி அவமானப் படுத்து கிறார்கள். நீங்கள் அரசாங்கத்தில் ஏதாவது வேலைத் தேடிக் கொள்ளுங் கள்'' என நச்சரிக்கத் தொடங்கினாள்.

நித்யானந்தும் ஆளுநர் அலுவலகத் தை முற்றுகையிட்டு ஆளுநரைப் பலமுறை சந்தித்து தனக்கு ஏதாவது வேலை தரும்படி கெஞ்சத் தொடங் கினான். ஆனால் ஆளுநர் வேலை எதுவும் காலியில்லை என்று சொல்லி விட்டார். நித்யானந்த் விடுவதாக இல்லை. ''ஐயா, எனக்கு சம்பளம் முக்கியமில்லை. வேலை தான் முக்கியம். சம்பளம் இல்லா விட்டாலும் சரி. ஏதாவது எனக்கு வேலை கொடுங்கள்'' என்று காலில் விழுந்து கெஞ்ச ஆளுநரும் இரக்கப் பட்டு அவனுக்கு வேலை தரத் தீர்மானித்தார்.

ஆனால் அனுபவமில்லாத வனுக்கு என்ன வேலை தருவது? வெகுவாக யோசித்தபின் ஆளுநர் ''சரி. நமது ஊரில் பாயும் ஆற்றில்



எவ்வளவு அலைகள் உண்டாகின்றன என்று எண்ணுவாய். அதுவே நான் உனக்கு அளிக்கும் வேலை'' என்றார்.

அரசாங்க வேலை உத்தரவைப் பெருமையுடனும் மகிழ்ச்சியுடனும் பெற்றுக் கொண்ட நித்யானந்த் தனக் கென ஒரு படகை ஏற்பாடு செய்து கொண்டு, ஆற்றில் படகுகள் ஒரே சமயத்தில் புறப்பட்டு, வந்து சேருமிடத்தில் இருந்து கொண்டு, கையில் நோட்டுப் புத்தகத்துடன் அலைகளை எண்ணத் தொடங்கி னான். முதலில் நித்யானந்த் செய்யும் வேலையைப் பார்த்து பலரும் ஆச்சரியம் அடைந்தாலும், அவன் ஏதோ முக்கியமான நோக்கத்திற்காக இந்த அரசுப் பணியை செய்கிறான் என்று நம்பத் தொடங்கினர். இப் போது நித்யானந்தை பார்ப்பவர்கள்

அரசாங்க ஊழியன் என்பதற்காக அவனுக்கு மதிப்பும் மரியாதையும் மக்கள் அளிக்கத் தொடங்கினர். நித்யானந்துக்கும் அவனுடைய குடும்பத்தினருக்கும் மக்கள் மத்தியில் மதிப்பு உண்டாயிற்று.

நித்யானந்த் மெதுவாக தன் அதிகாரத்தைப் படகு ஓட்டுபவர்களிடம் க ாட்டத் தொடங்கினான். ஆற்றில் ஓடும் படகுகளை அதிகாரப் பூர்வமாக நிறுத்தி, தன் அலை எண்ணும் வேலையை செய்து முடித்த பிறகு செல்ல அனுமதித்தான். சில நேரங்களில் படகுகளை மணிக் கணக்கில் இவ்வாறு நிறுத்தியதும் உண்டு. தங்கள் வேலை தடங்கல் இல்லாமல் நடக்க வேண்டுமானால், நித்யானந்தை முறையாக கவனித்தால் நடக்கும் என எண்ணி, படகுக் காரர்கள் அ வனுக்கு ை கயூட்டும் வழங்கத் தொடங்கினர்.

இவ்வாறு நாட்கள் செல்லும் போது, நித்யானந்த் எதிர்பார்த்த அந்த நாளும் வந்தது. சோம்நாத் ஒருநாள் தன் குடும்பத்தினருடன் தடபுடலாக ஆற்றங்கரைக்கு வந்து, படகில் ஏறி பக்கத்து ஊருக்கு ஒரு முக்கியமான திருமணத்திற்கு செல்லத் தொடங் கினான். சோம்நாத் படகு தன் அருகில் வந்தவுடன், நித்யானந்த் அவனது படகை நிறுத்தி விட்டான்.

தனது அரசுப் பணியைச் செய்ய வேண்டும் என்றும், அதுவரையில் படகு ந கரக்கூ டாது எ ன்றும் கட்டளைப் பி றப்பித்துவிட்டு மி க மெதுவாக தன் வேலைகளை செய்து வேண்டுமென்றே காலம் கடத்தி னான். பல மணி நேரம் சென்றும், நித்யானந்த் படகை செல்லவிட வில்லை. சோம்நாத்துக்கோ முகூர்த்த நேரத்திற்குள் செல்ல வேண்டிய அவசரம் இருந்தது.

ஆனால் அரசுப் பணி என்ற சாக்கில் மிகவும் தாமதம் செய்யும் நித்யானந்தை அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. இறுதியில் சோம்நாத்துக்கு வேறு வழியில்லா மல் தனது கௌரவத்தை விட்டு நித்யானந்தைக் கெஞ்ச வேண்டி இருந்தது. நித்யானந்தும் பழி வாங்கிய மகிழ்ச்சியில் சோம்நாத்தின் படகினைச் செல்ல ஒரு வழியாக அனுமதித்தான்.

அதன்பிறகு சோம்நாத் தன் இறுமாப்பினைத் துறந்து, நித்யா னந்துடன் நட்புறவு கொண்டான். அவர்கள் இருவரது குடும்பங்களும் தங்கள் பிணக்குகளை மறந்து நல்லிணக்கத்துடன் பழக ஆரம் பித்தன.





# ராஜப் பிரதிநிதி

ஒரு சமயம் பிரயாக் ராஜ்ஜியத்தை ஐயத்திரதன் என்னும் மன்னன் ஆண்டு வந்தான். அவனுடைய ராஜ்ஜியத்தின் கிழக்குப் பகுதியில் ஒரு முறை மழையே இல்லாமல் பஞ்சம் ஏற்பட்டு விட்டது. விவசாயம் நடைபெறாமல் அந்தப் பகுதி மக்கள் பசியும் பட்டினியுமாய் அவதிப் பட்டனர். அவர்களது துன்பத்தை அறிந்த மன்னன் அப்பகுதி மக்களுக்கு பணமும், தேவையான பொருளும் கொடுத்து உதவினான். அப்படியும் மக்களுக்கு அது போதவில்லை என்று மீண்டும் மீண்டும் உதவிக் கேட்டுக் கொண்டேஇருந்தனர்.

இதனால் சற்று சலிப்படைந்த மன்னன் ''இயற்கை சில சமயங்களில் பொய்த்து விடுவதுண்டு. ஆனால் அதை உறுதியுடன் சமாளிக்கும் திறனும் மக்களுக்கு வேண்டும். எத்தனை நாள் தான் நான் உதவி செய்ய முடியும்?'' என்று குறை கூறினான். அவனது முதல் அமைச்சர் அரசனை அங்குள்ள நிலைமையை நேரில் சென்று கண்டு அறியுமாறு வேண்டுகோள் விடுத்தார். அவர் சொல்வதும் சரிதான் என்று உணர்ந்த மன்னன் மாறு வேடத்தில் பஞ்சத்தால் இடர்ப்படும் மக்களைக் காணச் சென்றான். உண்மையிலேயே அந்தப் பகுதியில் வறட்சி மிகுந்து காணப்பட்டது. ஆனால் தன் நாட்டின் மற்ற பகுதிகளில் ஏற்கனவே பஞ்சத்தை இதற்கு முன் நேரில்பார்த்திருந்த மன்னனுக்கு கிழக்குப் பகுதி மக்கள் தங்கள் இன்னல்களை மிகைப் படுத்துகின்றனர் எனத் தோன்றியது.

மாறு வேடத்திலிருந்த மன்னன் அங்குள்ள மக்களிடம் ''நான் அயல் ஊர்க்காரன். பஞ்சம் வந்தால் நீங்கள் கடினமாக உழைத்து அதை சமாளிக்க வேண்டும். நீங்கள் வீணாக அமர்க்களம் செய்கிறீர்கள்'' என்று குறை கூறினான்.

உடனே அவர்கள் கோபமடைந்து ''கஷ்டத்தை அனுபவிப்பவனுக்கே கஷ்டம் என்றால் என்னவென்று தெரியும். நீ இரக்கம் இல்லாதவன் எனத் தோன்றுகிறது. குணாநிதி என்று ஒரு

-நிரஞ்சன்-



கவிஞர் இங்கு உள்ளார். அவரைப் போன்ற இரக்க சுபாவம் உள்ளவர்களுக்குத் தான் எங்களுடைய துன்பங்களைப் புரிந்து கொள்ள முடியும்'' என்றனர்.

குணாநிதி என்பவன் மிகுந்த மென்மையான இதயம் கொண்ட கவிஞன் என்றும் மக்களுடைய கஷ்டங்களைக் கண்ட மாத்திரத்தில் அவனிடமிருந்து உணர்ச்சிகரமான கவிதைகள் உருவாகி விடும் என்றும் அதை கேட்பவர்கள் கல் மனதும் கரைந்து விடும் என்றும் அறிந்தான். மன்னன் அந்த குணாநிதியை ஒரு நாள் சந்தித்தான்.

குணாநிதி மக்கள் பஞ்சத்தால் படும் அவதிகளைப் பற்றி உருக்கமாக இயற்றிய கவிதைகளைக் கேட்டதும் மன்னனே உருகி விட்டான். இப்போது அவனுக்கு கஷ்டம் என்றால் என்ன வென்றும் மக்கள் எவ்வளவு கஷ்டப் படுகிறார்கள் என்பதும் புரிந்தது. குணாநிதி போன்ற கவிஞர்களைத் தன் பிரதிநிதிகளாக நியமித்து நாட்டின் பல பகுதிகளுக்கும் அனுப்பினால் நாட்டிற்குப் பயன் ஏற்படும் என்று கருதினான்.

நாடு திரும்பிய ஜயத்திரதன் முதல் வேலையாகத் தன் முதலமைச்சரை அழைத்தான். அவரிடம் குணாநிதியைத் தன் பிரதிநிதியாக நியமிப்பதைப் பற்றிக் கூறி அவரிடம் ஆலோசனை கேட்டான். சற்று யோசித்த முதலமைச்சர் ''பிரபு குணாநிதி இரக்கசுபாவமுள்ள ஒரு கவிஞன். அவ்வளவுதான்! ஆனால் பிரதிநிதியாக நியமிக்கப் படுவதற்கான தகுதி அவனிடம் உள்ளதா என்று தெரியவில்லை. அவனை இங்கு வரவழைத்து சோதித்துப் பார்த்து பிறகு முடிவு எடுப்போம்'' என்றார். ''நீங்கள் அவனை சோதிக்க விரும்பினால் தாராளமாகச் செய்யுங்கள்'' என்றான் மன்னன். உடனே முதலமைச்சர் குணாநிதியை வரவழைத்தார். மன்னனையும் அமைச்சரையும் வணங்கிய குணாநிதி தான் என்ன செய்ய வேண்டுமெனக் கேட்டான். அமைச்சர் ''நீங்கள் மிகவும் இரக்க குணம் உள்ள கவிஞர் என்று அறிந்தோம். ஒரு தம்பதியினரின் வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள மாபெரும் துயரத்தைப் போக்குவதற்காக உங்கள் உதவி தேவை'' என்று சொல்லிய அமைச்சர் தொடர்ந்து ''சுமதி சந்திரன் ஆகிய இருவரும் மனமொத்த தம்பதியினர். ஆனால் துரதிருஷ்டவசமாக சந்திரன் மேல் கோபங்கொண்ட ஒரு முனிவர் அவனை மூன்று கால்கள்

கொண்ட கிழவனாக மாறும் படி சாப மிட்டு விட்டார். சந்திரனும் சுமதியும் அவர் கால்களைப் பற்றி அழுது மன்றாடி மன்னிப்பு கேட்க முனிவரும் அந்த சாபத்திற்கு ஒரு பரிகாரம் கொடுத் துள்ளார். மிக இரக்க குணமுள்ள தங்களது உறவினன் இல்லாத ஒருவன் தன் கட்டை விரலைக் கீறி ரத்தத்தை சந்திரன் தலையில் விழச் செய்தால் சாப விமோசனம் கிடைக்கும் என்று கூறி உள்ளார். ஆக வே நீங்கள் தான் சந்திரனுக்கு உதவி செய்ய வேண்டும்'' என்றார்.

இதைக் கேட்ட மாத்திரத்திலேயே குணாநிதியின் மனம் மெழுகாய் கரைந்தது. உடனே மன்னனும் அமைச் சரும் கூட வர அந்த தம்பதியினரின் வீட்டுக்குச் சென்றான். சந்திரனுடனும் சுமதியுடனும் மனதார ஆறுதலாகப் பேசி விட்டு சந்திரன் படும் மனக் கஷ்டத்தைப் பற்றி உருக்கமாக ஒரு கவிதை இயற்றினான். அந்த கவிதை யைக் கேட்டால் கல்லும் கரைந்து விடும். ஆனால் அரசனுக்கும் அமைச் சருக்கும் மட்டும் சந்திரனின் சாபம் என்பதெல்லாம் பொய். இது குணாநிதி யை சோதிக்க நடத்தப்படும் நாடகம் என்று தெரியும். அப்படியும் அந்தக் கவிதையை கேட்டமாத்திரத்தில் அவர்களுக்கு மனம் உருகி கண்ணீர் பெருகியது.

குணாநிதியின் கவிதையில் உள்ள சாராம்சம் என்னவெனில் இந்த உலகில் மனிதர்கள் இறைவனின் திருவிளை யாடல்படி இன்பம் துன்பம் யாவற்றை யும் அனுபவிக்கின்றனர். ஆனால் இறைவன் இன்னலுறும் மனிதர்களுக்கு கட்டாயம் உதவி செய்வான். எப்படி



முனிவர் சாபமிட்ட பிறகு சாபவிமோசனத்திற்கும் வழி சொன்னாரோ அவ்வாறே சந்திரனுக்கு உதவி செய்ய இறைவன் இரக்கமுள்ள ஒருவனை கட்டாயம் அனுப்பி வைப்பார்'' என்பதே. இதைக் கேட்டதும் அமைச்சர் மன்னனை நோக்கி ஒரு பொருள் பொதிந்த புன்னகையை உதிர்த்தார். இதற்குப் பின் மூவரும் அவ்விடத்தை விட்டுச் சென்றனர்.

அரண்மனையை அடைந்ததும் கவிஞனை அனுப்பிவிட்டு அமைச்சர் மன்னனை நோக்கி ''மன்னா! நான் முன்பே சொன்னேன் அல்லவா! குணாநிதி வெறும் கவிஞன் மட்டும் தான் என்பது இன்று நடந்த சம்பவத்திலிருந்து உறுதியாகிறது. அவனுடைய கவிதை உருவாக்கும் திறமைகொண்டு, அவனால் கவிதை மட்டுமே இயற்ற முடியும்.

மற்றவர்களுடைய கஷ்டத்தைக் கண்டு கவிதை பாடும் அவனுக்கு அவர்களுக்கு உதவி செய்யத் தோன்றுவதில்லை. அவனுடைய கவிதை உள்ளத்தை உருக்குவதால் இருந்து மட்டும் என்ன பயன்? அதனால் கஷ்டங்கள் விலகி விடுமா? எவன் ஒருத்தன் மக்களது கஷ்டங்களைக் கண்டறிந்து அவற்றைப் போக்கவும் வழி வகுக்கிறானோ அவனே உங்கள் பிரதிநிதியாக இருக்கத் தகுதியானவன். நீங்களே பார்த்தீர்கள் அல்லவா! சந்திரனின் துயரத்தைக் கண்டு கவிதை வடித்தவனுக்கு அதைப் போக்க தன் கட்டை விரலிலிருந்து ரத்தம் எடுத்துத் தர ஏன் மனம் வரவில்லை! அதையல்லவா நாம் அவனிடமிருந்து எதிர்பார்த்தோம்! 'இரக்கமுள்ள ஒருவனை கடவுள் கட்டாயம் உன்னிடம் அனுப்புவார்' என்று கவிதை இயற்றினானே தவிர தானே அந்தக் கஷ்டத்தைப் போக்க முயற்சி செய்யவில்லை.

ஆகவே அரசே, வெறும் இரக்கப்பட்டு கவிதை பாடினால் போதாது. ராஜப் பிரதிநிதிக்கு கஷ்டத்தைத் தானே போக்கவோ அல்லது மற்றவர் உதவியுடன் கஷ்டத்தைப் போக்கவோ மனமிருக்க வேண்டும்'' என்றார்.

முதல் அமைச்சர் சொன்னது சரியென்று படவே அரசனும் தன் திட்டத்தை கைவிட்டு விட்டான்.



# செய்திச் சுடர்

## கணினி நூலகம்




இந்தியாவின் முதல் கணினி நூலகம் கேரள மாநிலத்து திருவனந்த புரத்தில் ஜனாதிபதி டாக்டர் அப்துல்கலாம் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இதுவரை சுமார் 30,000 நூல்கள் கணினியில் பதிக்கப் பட்டுள்ளன.

ஒவ்வொரு ஆண்டும், ஓலைச் சுவடிகள் முதல் அச்சிடப் பட்ட நூல்கள் வரை சுமார் ஒன்றரை லட்சம் நூல்கள் கணினியில் பதிக்கப்படும். இந்தக் கணினியில் பதிவு செய்யப்பட்ட நூல்களை நாட்டின் எந்த மூலையில் இருந்தும் தங்கள் கணினி மூலம் படித்துவிடலாம்.

## வாடியப் பூக்கள்

கோயில்களில் பயன்படுத்தப்பட்டு வாடியப் பூக்களை வீணாக்குவதற்குப் பதிலாக அவற்றைப் பக்குவப் படுத்தி வண்ணங்கள் தயார் செய்யலாம் என்று கொல்கத்தாவிலுள்ள ஜாதவப்பூர் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்துள்ளனர். சிவப்பு, மஞ்சள், நீலம் ஆகிய வண்ணங்களைத் தயாரிக்க முடியும் என்றும், இவற்றை துணிகளுக்கு சாயம் ஏற்றப் பயன்படுத்தலாம் என்றும் கண்டு பிடித்துள்ளனர். கர்னாடகாவிற்கும் தமிழகத்திற்கும் அடுத்தபடியாக மேற்கு வங்காளத்தில் பூக்கள் மிக அதிக அளவில் ஒரு நாளைக்கு 6,500 டன்கள் அளவில் உற்பத்தி செய்யப் படுகின்றன.




இவற்றில் பாதியளவு உள்ளூர்க் கடைகளில் விற்கப்பட்டு கோயில் களிலும் மதச் சடங்கு களிலும் பயன்படுத்தப் படுகின்றன.

# வாசகர்களுக்குக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.



**கீழ்காணும் கதையைப் படியுங்கள்:**

பல ஆண்டுகளுக்கு முன் ஒரு புகழ் பெற்ற மருத்துவர் பல இடங்களுக்குச் சென்று நோயாளிகளுக்கு சிகிச்சை அளித்து வந்தார். ஒரு நாள் ஒரு நகரத்தில் அவர் தங்கியிருக்கையில் அந்த நகரத்து ஜமீன்தார் அவரை தன் இடத்திற்கு வரவழைத்தார். "எனக்கு எல்லா விதமான நோய்களும் உள்ளன," என்று மருத்துவரிடம் தன் நோய்களைப் பற்றி விளக்கினார். எல்லாவற்றையும் கேட்டு விட்டு அந்த மருத்துவர் மருந்து எதுவும் தராமலே சென்று விட்டார். இது போல் பல முறைகள் வந்து பார்த்து விட்டு மருந்து தராமல் சென்று விட்டார்.

இறுதியில் ஒருநாள் மருத்துவர் ஜமீன்தாரைப் பார்த்து, "உங்களுக்குத் தேவையானால் என்னைக் கூப்பிடுங்கள்." என்று சொல்லிவிட்டு ஊரைவிட்டுச் சென்று விட்டார். ஆறுமாதம் கழித்து அதே ஊருக்கு மீண்டும் திரும்பிய அந்த மருத்துவர் ஜமீன்தாரை சந்தித்து "நீங்கள் என்னை இதுவரை ஏன் கூப்பிடவேயில்லை?" என்று கேட்டார்.

- மருத்துவர் ஜமீன்தாருக்கு மருந்துகள் தராதது ஏன்?
- ஜமீன்தாருக்கு நிஜமாகவே நோய் இருந்ததா, இல்லை தனக்கு நோய் இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டிருந்தாரா?

உங்கள் விளக்கத்தை 100-150 சொற்களில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து உறைமீது கதைப் போட்டி, ஜூன் மாதம் என எழுதி அனுப்பவும். கீழே கொடுக்கப்பட்டுள்ள கூப்பனையும் சேர்த்து அனுப்ப வேண்டும்..

## முடிவு தேதி : ஜூலை 31, 2004

**பெயர்** ---------------------------**வயது**---------**பிறந்த தேதி**-------------

**பள்ளியின் பெயர்** ------------------------------------------------

**வகுப்பு**--------------------**வீட்டு முகவரி**------------------------

-------------------------------------------------------------------

----------------------------------------------**பின்கோடு**------------

**பெற்றோர் கையொப்பம்** **கலந்து கொள்வோரின் கையொப்பம்**

**சந்தமாமா இந்தியா லிமிடெட்**

82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.

# THE ADVENTURES OF G-man



துன்பத் தீவில் பிக்னிக்
பகுதி II

வழங்குவோர்




POWER SUPPLY



Visit: www.parleproducts.com

இது வரையிலான கதை... டெக்ரோவின் பஸ்ஸில் சென்று கொண்டிருந்த ஸ்கூல் குழந்தைகளைக் கடத்திச் செல்கிறான். அவர்களை ஒரு கொடிய மெஷினில் போட்டு அவர்களின் சக்தியை உறிஞ்சி தன் உடலில் மாற்றத் திட்டமிடுகிறான். இதன் மூலம் டெக்ரோவின் தான் என்றும் இளமையாக இருக்க நினைக்கிறான். ஆனால், இதெல்லாம் நடக்கும் போது ஜீ-வேன் எங்கிருக்கிறான்?... தொடர்ந்து படியுங்கள்.












சூர்யராஜ் தனக்குப் பிடித்தமான ஆகாரமான சக்தி தரும் பார்லே-ஜீ எடுத்து சாப்பிடுகிறான். டெர்ரோவீனின் கொடிய திட்டத்தை முறியடிக்க பேக்கில் இருக்கும் எல்லாவற்றையும் அவன் சாப்பிட வேண்டி வரும்.




சூரியராஜ் ஜீ-மேன் ஆவதற்கு முன் சூரியனிலிருந்து ஒளியை ஒரு நொடிப் பொழுதில் கிரகிக்கிறான் என்று வரலாறு கூறுகிறது. அது ஒரு சில விநாடிகள் கருமையாக ஆவதற்கான காரணமும் இது தான். மேலும், ஒருவராலும் இந்த மாற்றத்தைக் காண முடிவதில்லை.







தீமையை அழிப்பவன்

தீப்பந்து ஒன்று ஒளியின் வேகத்தில் தீவை நோக்கி வேகமாக வந்து கொண்டிருக்கிறது.
அதன் வேகம் 3,00,000 கி. மீட்டர் விநாடிக்கு.

தீவின் அட்லான்டிஸ் வாசிகளின் கிண்டல் நன்றாக வேலை செய்கிறது போலும். டெக்ரோவினின் பயிற்சி பெற்ற கமாண்டோக்கள் மற்றும் பலம் பொருந்திய ரோபோவின் தீ-மேனை வரவேற்கத் தயாராக இருக்கின்றனர்.

அவர்கள் எதிர்பார்க்காதது தீப்பந்து.

அதுவும் அவர்கள் மத்தியில் அது வரும் என்று.

DOOM




அந்த ஸ்லோமோஷனை நிறுத்தப்பா...


ZRAAK
பகுதி // முடிவுறுகிறது. கடத்தப்பட்ட குழந்தைகளை காப்பாற்ற ஜீ-மேன் சரியான சமயத்தில் சென்றடைவானா?
வெறும் ஒரு பேக்கட் பார்லே-ஜீ கொண்டு அவனால் டெர்ரோவினைப் பிடிக்க முடியுமா? பகுதி ///-ஐ எதிர்பாருங்கள்.



# போட்டியும், பொறாமையும்

**நா**ராயணபுரத்தில் வசித்து வந்த பூபாலன் செல்வந்தர் மட்டுமல்ல, தர்ம சிந்தனையாளரும்கூட. யாருக்கு எந்த உதவி தேவைப்பட்டாலும் அதை உடனே செய்து வந்து அந்த ஊர் மக்களின் நன் மதிப்பைப் பெற்றிருந் தார்.

ஒரு நாள் காலை, அவர் குளித்து முடித்துவிட்டு, பூஜைக்காகப் பூக்கள் பறித்துக் கொண்டிருக்கும் போது ஓர் ஏழைச்சிறுவன் அவரிடம் வந்தான். அவன் ''ஐயா வணக்கம். என் பெயர் கிருஷ்ணன். உங்களிடம் ஏதாவது வேலை தேடி வந்துள்ளேன்'' என்றான்.

பூபாலன் சிரித்துக் கொண்டே உன்னால் என்ன வேலை செய்ய முடியும் என்று கேட்க, அவன் ''நீங்கள் கொடுக்கும் வேலை எதுவானாலும் செய்வேன். உங்கள் நல்ல குணத்தைப் பற்றி ஊரார் புகழ்ந்ததால் நான் உங்களைத் தேடி வந்தேன்,'' என்றான்.

''கிருஷ்ணா எனக்கு வேலை செய்ய தற்போது யாரும் தேவையில்லை. ஆனால், உனக்குக் கல்வி கற்க விருப்பம் இருந்தால் சொல். அதற்கு ஏற்பாடு செய்கிறேன்,'' என்றார்.

கிருஷ்ணன் உடனே அவரை விழுந்து வணங்கி, ''ஐயா, எனக்கு அதில் மிகவும் விருப்பம் உண்டு. தாங்கள் உதவி செய்தால் நான் என்றென்றும் உங்களுக்குக் கடமைப் பட்டிருப்பேன்'' என்றான். உடனே பூபாலன் தன் மகன் ராமனைக் கூப்பிட்டு ''ராமா, இவன் பெயர் கிருஷ்ணன். இவன் இனி நம்முடன் இருப்பான். இனி பள்ளியில் சேர்ந்து, உன் வகுப்பிலேயே இவனும் படிப்பான்'' என்று சொல்லி அனுப்பினார்.

ஆனால் பூபாலனின் மனைவி ராஜேஸ்வரிக்கு இதில் கொஞ்சமும் இஷ்டம் இல்லை. ''எத்தனை அனாதை களுக்குத்தான் இவ்வாறு புகலிடம் அளிப்பீர்கள்!'' என்று கோபத்துடன் கணவனைக் கடிந்து கொண்டாள்.

பூபாலன் வீட்டு வேலைகளை செய்து கொண்டே, ராமனுடன் கிருஷ்ணன் அதே பள்ளியில் அதே வகுப்பில் படிக்க ஆரம்பித்தான்.

-ரமேஷ் பந்த்-



மிகவும் புத்திசாலியான கிருஷ்ணன் மிக நன்றாகப் படித்து ராமனைவிட அதிக மதிப்பெண்கள் வ ாங்கி வ குப்பில் முதலாவதாக வரத் தொடங்கினான். அதுவரை வகுப்பில் முதலாவதாக இருந்த ராமன் இப்போது கிருஷ்ணன் வந்த பிறகு இரண்டாவது இடத்திற்குச் செல்ல நேர்ந்தது. இதைக் கண்ட ராமன் கிருஷ்ணன் மீது பொறாமை கொண் டான். தன் தாயிடம் ''அம்மா, இந்தக் கிருஷ்ணன் எனக்குப் போட்டியாக முளைத்து வி ட்டான். இ வனை ந மது வீட்டிலிருந்தும் என் வகுப்பில் இருந்தும் வெளியேற்ற வழி செய்'' என்றான்.

''ஆரம்பத்திலிருந்தே இந்தக் கிருஷ்ணனை வீட்டில் சேர்க்க வேண்டாம் என்று உன் அப்பா விடம் சொன்னேன். அவர் கேட்கவில்லை'' என்று குறைகூறியபின், நேரே கிருஷ்ண னிடம் சென்று, ''இனி வகுப்புத் தேர்வு களில் எல்லாக் கேள்விகளுக்கும் பதில் எழுதாதே. ஏதாவது ஒரு கேள்வியை விட்டுவிடு. ஏனெனில் ராமன் தான் வகுப்பில் முதலாவதாக இருக்க வேண்டும்'' என்றாள். மௌனமாக அதைக் கேட்டுக் கொண்ட கிருஷ்ண னும் அவ்வாறே செய்ய ஆரம்பித்தான். விரைவிலேயே ராமன் மீண்டும் வகுப்பில் முதலாக வர ஆரம்பித்தான்.

ஆனால் இது வகுப்பு ஆசிரியரின் கண்களில் பட்டு விட்டது. இதில் ஏதோ விஷயம் இருக்கிறது என்று ஊகித்த அவர் கி ருஷ்ணனைத் த னியே அழைத்து விசாரித்ததில் அவருக்கு உண்மை தெரிய வந்தது. உடனே கிருஷ்ணனுக்கென்று ஒரு வி சேஷத் தேர்வு நடத்தி அதில் மிக நன்றாகச் செய்த கிருஷ்ணனை உயர் வகுப்பிற்கு அனுப்பிவிட்டார். ராமனும் ''நமக்குப் போட்டியாக இருந்தவன் நம் வகுப்பை விட்டுப் போய் விட்டான்'' என்று நிம்மதி அடைந்தான்.

வகுப்பு ஆசிரியர் மூலமாக பூபாலன் நடந்த விஷயங்களைக் கேள்விப் பட்டார். அவர் ''நீங்கள் செய்தது சரியே. இதனால் கிருஷ்ணனுக்கு நன்மையாயிற்று. ஆனால் என் மகன் ராமனுக்கு இதனால் நஷ்டமே தவிர நன்மையில்லை. கிருஷ்ணன் தனக்குப் போட்டி என்று கருதி ராமன் மனதில் பொறாமை ஏற்பட்டு விட்டது. இது தவறு என்று ராமன் உணரவில்லை. போட்டி என்பது இருந்தால்தான் ஒருவன் தன் திறமையையும் உழைப் பையும் மேலும் சிறப்பாகப் பயன்

படுத்தி முன்னேற முடியும். போட்டி யாளரிடமிருந்து நாம் கற்க வேண்டிய வை பெற வேண்டியவை பல உள்ளன. போட்டி என்பது நமது நன்மைக்கே என்று ராமனை உணரச் செய்யுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார்.

மறுநாள் ஆசிரியர் வகுப்பில் ராமன் கேட்டு உணரும்படி ஒரு கதை சொன்னார். ''ஒரு மன்னனுக்கு ஒரே ஒரு மகன் இருந்தான். அந்த மகனை மிக செல்லமாக வளர்த்தார். இளவரசன் குதிரை சவாரியில் வல்லவன். இந்தத் திறமையை மக்கள் எல்லோரும் புகழ இளவரசனுக்குத் தன்னை மிஞ்சியவர் இல்லை என்ற கர்வம் ஏற்பட்டு விட்டது. ஒருநாள் அந்த நாட்டுக்கு மலை சாதியைச் சேர்ந்த ஒரு வீரன் வந்தான். அவன் இளவரசனைக் காட்டிலும் நன்றாகக் குதிரை சவாரி செய்யவே, மக்கள் இப்போது அவனைப் புகழத் தொடங்கினர். இது கண்டு இளவரசனுக்கு அவன் மேல் பொறாமை ஏற்பட்டது. பலமுறை அந்த மலை சாதி இளைஞன் இளவரசனிடம் நட்புக்கரம் நீட்ட முயன்றும் இளவரசன் அதை ஏற்கவில்லை.

ஒருநாள் அந்த இளைஞன், ''இளவரசே, குதிரைச் சவாரியைத் தவிர இன்னும் பல கலைகளிலும் எனக்குத் திறமை உண்டு. அவற்றை உங்களுக்குக் கற்றுத் தருகிறேன்,'' என்றதும் இளவரசன் அவன் முகத்தில் அடித்தாற்போல் ''உன்னிடமிருந்து எதுவும் கற்றுக் கொள்ள நான் தயாராயில்லை'' என்று மறுத்து விட்டான். ஒருநாள் காட்டில், தன் நண்பர்களுடன் குதிரையில் சென்று கொண்டிருந்த இளவரசன், தற்



செயலாக அவர்களிடமிருந்து வழி தவறிப் பிரிந்து விட்டான். அப்போது அந்தப் பக்கமாக அந்த மலை சாதி இளைஞன் வர அவனைக் கண்டதுமே இளவரசன் வெறுப்பில் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டான். அந்த சமயம் பார்த்து பு தர்களின் ஊ டே ஒ ரு பு லி பயங்கரமாக உறுமிக் கொண்டு வெளியே வந்தது. அதைக் கண்டு மிரண்ட இளவரசனின் குதிரை தறி கெட்டு ஓட, புலி அவர்களைத் து ரத்த இவ்வாறு இளவரசனின் உயிருக்கே ஆபத்து வருவதாக இருந்தது. இதைக் கண்ட இளைஞன் கடிதாய் விரைந்து புலியின் பி ன்சென்று அ தனைக் கொன்று இளவரசனின் குதிரையையும் கட்டுப்படுத்தி இளவரசனைக் காப் பாற்றினான்.

தன் உயிரைக் காப்பாற்றிய இளை ஞனைக் கண்டு இளவரசன், ''குதிரை சவாரி மட்டுமல்ல மற்ற பல பயன்படும் விஷயங்களையும் அறிந்த நீ என் உயிரைக் காப்பாற்றினாய். மிக்க நன்றி, என்று கூறி அன்றிலிருந்து தன் பொறா மையை விட்டொழித்தான்.''

இவ்வாறு கதை சொல்லி முடித்த ஆசிரியர் மாணவர்களை நோக்கி, ''மனிதர்கள் எந்த வயதிலும் கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய உள்ளது. மலைசாதி இளைஞனிடம் பொறாமை கொள்ளாமல் அவனுடன் நட்புற வோடு இருந்திருந்தால் இளவரசன் அவனிடமிருந்து பல அ ரிய கலை களுடன் கூட மிரண்ட குதிரையை அடக்குவது பற்றியும் அறிந்திருப்பான். இத்தகைய அபாயம் நேர்ந்திருக்காது. ஆனால் பொறாமை வயப்பட்ட இளவரசன் தனது போட்டியாள னிடமிருந்து இன்னும் சிறப்பாகக் கற்றுக் கொள்ளாமல் அவனைப் புறக்கணித்தான். நாம் தான் சிறந்தவர் என்று அகந்தை கொள்வதைவிட, நமக்குத் தெரியாத விஷயங்களை மற்றவர்களிடமிருந்து கேட்டுக் கற்றுக் கொள்வது தவறில்லை. நன்மையையே உண்டாக்கும்'' என்று கூறி முடித்தார்.

ஆசிரியர் எதை சுட்டிக் காட்டுகிறார் என்பது ராமனுக்குப் புரிந்து விட்டது. மறு நாள் ராமன் தானாகவே ஆசிரியரிடம் சென்று ''ஐயா, எனக்கும் ஒரு விசேஷத் தேர்வு நடத்துங்கள். என்னையும் கிருஷ்ணனுடன் அதே வகுப்பிற்கு மாற்றிவிடுங்கள்,'' என்றுக் கேட்டுக் கொண்டான். ராமனது இந்த மனமாற்றத்தைக் கண்டு ஆசிரியர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.





# உலக அமைதிக்காக ஒலிம்பிக் ஜோதி

ஏதன்ஸ் நகரில் வரும் ஆகஸ்ட் 13ந் தேதி முதல் 28வது ஒலிம்பிக் போட்டி தொடங்க இருக்கிறது. ஒலிம்பிக் போட்டிகளில் தொன்று தொட்டு கடைப் பிடித்து வரும் வழக்கப்படி, போட்டி தொடங்குவதற்கு சில மாதங்களுக்கு முன் ஒலிம்பியா என்னுமிடத்தில் ஒலிம்பிக் ஜோதி என்னும் ஒரு தீப்பந்தம் பற்ற வைக்கப் பட்டு, போட்டியில் பங்கு பெறும் ஐந்து கண்டங்களின் முக்கிய நாடுகளின் வழியே அந்தத் தீப்பந்தம் கொண்டு செல்லப்படும். முதல் முறையாக இந்த ஒலிம்பிக் போட்டியில் அந்த தீப்பந்தம் இந் தியா வழியே எடுத்துச் செல்ல ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. கடந்த மார்ச் மாதம் 25ந் தேதி ஏற்றப்பட்ட இந்த தீப்பந்தம் பல நாடுகளின் வழியே கொண்டு வரப்பட்டு, இந்தியாவின் தலைநகரமான தில்லியை கடந்த ஜுன் மாதம் 10ந் தேதி பெருத்த வரவேற்புடன் வந்தடைந்தது. மனமார்ந்த மகிழ்ச்சிக் கொண்டாட்டங் களுக்குப் பிறகு, இது தில்லியை விட்டுக் கிளம்பியது.

இன்னும் பல நாடுகள் வழியே செல்ல இருக்கும் இந்த ஜோதி இறுதியில் ஒலிம்பிக் மைதானத்தை அடையும். இந்த வழக்கம் கி.மு.776ல் தொடங்கி சுமார் 1100 ஆண்டுகள் வரை கடைப் பிடிக்கப்பட்டு இடையில் ஒலிம்பிக் போட்டிகள் நின்று விட்டதால் கைவிடப்பட்டது. ஒலிம்பிக் போட்டிகள் மீண்டும் 1896ல் தொடங்கினாலும், ஒலிம்பிக் தீப்பந்த நிகழ்ச்சி 1936ம் ஆண்டு பெர்லினில் நடந்த ஒலிம்பிக் போட்டியில் தான் மறுபடியும் நடைபெறத் தொடங்கியது.

இந்தமுறை ஒலிம்பிக் ஜோதியின் உட்கருத்து ''ஒலிம்பிக் ஜோதியை உலகெங்கும் எடுத்துச் சென்று மக்களிடையே நல்லுறவை ஏற்படுத்துங்கள்'' என்பதாகும். ஒலிம்பிக் போட்டிகளில் நம் நாட்டின் ஒத்துழைப்பைப் பாராட்டுவதற் காகவும் வரப்போகும் ஒலிம்பிக் போட்டிகளில் நாம் உற்சாகமாக பங்கேற்பதற்காகவும், இந்த முறை ஒலிம்பிக் ஜோதி இந்தியாவுக்கு கொண்டு வரப்பட்டதாக ஒலிம்பிக் நிர்வாகக் குழுவினர் அறிவித்து உள்ளனர்.



# என் கேள்விக்கென்ன பதில்?

**ப**ல நூற்றாண்டுகளுக்கு முன், பாலைவனப் பகுதியில் தீப்ஸ் என்ற ஊர் இருந்தது. அந்த ஊருக்குச் செல்லும் மிகத் தனிமையான நீண்ட சாலையில் ஓர் உயரமான மலை இருந்தது. அந்த மலை உச்சியில் ஓர் அரக்கி வசித்து வந்தாள். பெண்ணின் முகமும், சிங்கத்தின் உடலும், நாயின் பாதங்களும் பாம்பினை வாலாகவும் கொண்ட அந்த அரக்கி பார்ப்பதற்கு பயங்கரமாக இருப்பாள்.

அந்தச் சாலை வழியே செல்லும் வழிப்போக்கர்கள் மலையின் அருகே வந்ததும், அவர்களைக் கண்டு 'நில்' என்று தன் சிம்மக் குரலில் கர்ஜிப்பாள். குரலைக் கேட்டு திடுக்கிட்டுப் பார்த்தால் பயங்கர உருவத்துடன் கூடிய அரக்கியைக் கண்டு திகைத்து அஞ்சி நடுங்கி நின்று விடுவார்கள்.



''என்னுடைய புதிருக்கு விடை அளிக்காமல் இங்கு இருந்து செல்ல முடியாது. இன்று மாலை சூரியன் மறையும் வரை உனக்கு யோசிக்க வாய்ப்பு கொடுப்பேன். அப்படியும் விடை அளிக்க முடியாது போனால் இங்கே இறக்க வேண்டியதுதான்'' என்று அதிரடிக் குரலில் பேசும் அரக்கி முன் செயலிழந்து நிற்க, அரக்கி புதிர் கூறுவாள்.

''காலையில் தனது நான்கு கால்களைக் கொண்டு நடக்கும், நண்பகலில் இரண்டு கால்களைக் கொண்டு நடக்கும். மாலையில் மூன்று கால்களைக் கொண்டு

நடக்கும் உயிரினம் எது?'' என்று கேட்பாள். இந்தப் புதிருக்கு எந்தப் பயணியாலும் விடையளிக்க முடிவதில்லை. என்ன விடை என்று யோசித்து யோசித்து ஒன்றும் தோன்றாமல், மாலை நேரமும் முடிந்து விடையளிக்க முடியாமல் தவிக்கும் பயணிகளை, அந்த அ ரக்கி ெ கான்று விடு வது வழக்கம்.

இவ்வாறு பல நூற்றாண்டுகளாக நடந்து கொண்டு இருந்தது. இறுதியில் ஒருநாள் இடீபஸ் என்னும் மாவீரன் அந்த சாலை வழியே செல்ல நேர்ந்தது. மலையில் அமர்ந்திருந்த அரக்கி அந்த வீரனை நிறுத்தித் தான் வழக்கமாக விடுக்கும் புதிரைக் கேட்டாள். ஆனால் இடீபஸோ ச ற்றும் தயங்காமல் ''உன்னுடைய புதிருக்கு நான் தான் விடை'' என்றான்.

இந்த பதிலினால் ஆச்சரியமடைந்த அரக்கி, ''நீ என்ன சொல்கிறாய்?'' எனக் கேட்க இடீபஸ் ''நான் என்றால் மனிதன் என்று அர்த்தம். மனிதனது வாழ்க்கையின் காலை நேரம் அவனது குழந்தைப் பருவம். நடக்க இயலாத குழந்தைதன் கைகளையும் கால்களாகப் பயன்படுத்தி நான்கு கால்களால் தவழுகிறது. நண்பகல் மனிதனது இளமைப் பருவம். நடப்பதற்கு அவன் இருகால்களே போதும். மாலை நேரம் மனிதனது முதுமை. தள்ளாடும் கிழவன் ஒரு கோலையூன்றி நடக்கும் போது மூன்று கால்கள் தேவைப் படுகிறது'' என்று விடை அளித்தான்.

இந்த சரியான விடையைக் கேட்டவுடன் அரக்கி மலை மீதிருந்து குதித்து மறைந்து போனாள்.

இந்த அரக்கியின் பெயர் ஸ்ஃபிங்க்ஸ். இந்தப் புதிருக்கு ஸ்ஃபிங்க்ஸ் புதிர் என்று பெயர். இது



கிரேக்கர்களின் புராணக் கதைகளில் மிகச் சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். தன்னைப் பற்றி சரியாக அறிந்து கொள்ளாத மனிதன் தான் மரணத்தைத் தழுவுகிறான் என்று அவன், தான் யார் என்பதை என்று சரியாகப் புரிந்து கொள்கிறானோ அதாவது தன்னுடைய அழிவற்ற ஆத்மாவைப் பற்றிப் புரிந்து கொள்கிறானோ அன்றே அவன் அமரத்துவம் அடைந்து விடுகிறான்.

ஸ்ஃபிங்க்ஸ் என்னும் அரக்கி மரணத்தைக் குறிப்பிடுகிற ஒன்றாகும். தன்னுள்ளிருக்கும் அழிவற்ற ஆத்மாவைப் பு ரிந்து ெ காள்ளாத மனிதனை ஸ்ஃபிங்க்ஸ் அல்லது மரணம் ஆட்கொள்கிறது. தன்னைப் புரிந்து கொண்டவன் மரணத்தையே வென்று விடுகிறான். நமது மதத்தில் உள்ள உபநிடதங்களும் இதையே தான் விளக்குகின்றன.



# கோட்டை நாய்கள்

பிரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் போதிசத்வர் ஒரு நாயாகப் பிறந்து நாய்களின் கூட்டத்திற்குத் தலைவராக விளங்கினார். ஒரு நாள் அந்நாட்டு மன்னன் தன் ரதத்தில் எங்கோ போய் விட்டு அரண் மனைக்கு வந்தான். தன் ரதத்தை நிறுத்தி விட்டு அவன் உள்ளே சென்றான். அப்போது கோட்டைக் குள் வளர்க்கப்படும் நாய்கள் ஓடி வந்து குதிரைகளுக்குப் போடப் பட்டிருந்த கடிவாளங்களைக் கடித்து தோல் துண்டுகளைத் தின்று விட்டு ஓடிப் போய் விட்டன.

சற்று நேரத்திற்கெல்லாம் வெளியே வந்த மன்னன் தன் குதிரையின் கடிவாளங்கள் கடிக்கப் பட்டிருப்பதையும் சற்று தூரத்தில் சில நாய்கள் ஓடிக் கொண்டிருப்ப தையும் கண்டான். தன் விலையுயர்ந்த கடிவாளங்கள் நாசமாக்கப்பட்டது கண்டு அவன் கோபம் கொண்டு நாட்டிலுள்ள நாய்களை எல்லாம் அடித்துக் கொல்லும்படித் தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான்.

வீரர்களும் நாட்டில் தெருவில் கண்ட நாய்களை எல்லாம் அடித்துக் கொல்லலானார்கள். நாய்கள் எல்லாம் பயந்து ஓடிப் போய்த் தம் தலைவராக நாய் உருவில் இருந்த போதிசத்வரிடம் போய் அரசனின் கட்டளையைக் கூறிப் பல நாய்கள் இறந்து போனதையும் கூறின.

போதிசத்வரும் ''நான் இப்போதே அரச சபைக்குப் போய் அரசனுக்கு நல்லது கூறி இந்த உத்தரவை ரத்து செய்து நியாயம் வழங்கச் சொல்கிறேன்'' எனக் கூறி விட்டு அரச சபைக்குச் சென்றார். அங்கு அவர் அரண்மனைக்குள் நுழைந்து எப்படியோ தர்பார் மண்டபத்திற்குள் போனார். பிறகு அவர் அங்கு அரசன் சிம்மாசனத்தின் அடியே புகுந்து வந்து அரசனின் முன் நின்றார்.

-ஜாதகக் கதை-



அப்போது காவல் வீரர்கள் அந்த நாயை அடிக்க முயலவே அரசன் அவர்களைத் த டுத்து ''இது ஏ தோ சொல்ல வந்திருக்கிறது. அது என்ன என்று கேட்போம்'' என்றான்.

போதிசத்வரான நாயும் ''அரசே, நாட்டிலுள்ள நாய்களை எல்லாம் அடித்துக் கொல்லும்படி உ த்தரவு போட்டிருக்கிறீர்களே. இது எதற்காக?'' என்று கேட்டது. அரசனும் ''அவை என் தேர்க் குதிரைகளின் கடிவாளங்களைக் கடித்து அந்தத் தோலைத் தின்று விட்டன. விலை உயர்ந்த கடிவாளங்கள் நாசமாகி விட்டன. இதுதான் நாய்களின் குற்றம்'' என்றான்.

அப்போது போதிசத்வர் ''அந்தக் கடிவாளங்களை கடித்தது எந்த நாய்கள் என்று தெரியுமா?'' என்று கேட்க அரசனும் ''தெரியாது'' என்றான். அப்போது போதிசத்வர் 'அரசே! குற்றம் செய்தவன் யார் என்று கூடத் தெரியாமல் மொத்தமாக எல்லோரையும் தண்டிப்பது நியாயமா? உங்கள் வீரர்கள் இந்த நாட்டில் உள்ள எல்லா நாய்களையும் அடித்துக் கொல்லப் போகிறார்களா?'' என்று கேட்டார். அரசனும் ''நாட்டிலுள்ள, நாய்களை எல்லாம் கொல்லும்படி உத்தரவு போட்டேன். கோட்டைக் குள் நான் வளர்க்கும் நாய்களுக்கு இந்த உத்தரவு இல்லை'' என்றான். போதிசத்வரும் ''உங்களுக்குக் குற்றம் புரிந்த நாய்கள் எவை என்பது தெரியாது. ஆனால் கோட்டைக்குள் இருக்கும் நாய்களை ஒன்றும் செய்யக் கூடாது என்கிறீர்கள். இது பாரபட்சம் காட்டுவதாகும். வெறுப்பு கொண்ட அறிவற்ற செயலாகும். ஒரு அரசனிடம் ஒருவருக்கு ஒரு நீதி மற்றொருவருக்கு இன்னொரு நீதி என்று இத்தகைய குணங்கள் இருக்கக் கூடாது,'' என்றார்.

அது கேட்டு அரசன் சற்று யோசித்து ''அப்படியானால் என் விலையுயர்ந்த கடிவாளங்களைக் கடித்த நாய்கள் எவை என்று நீ கண்டுபிடி. அவைகளை தண்டிக்கிறேன். மற்ற நாய்களை ஒன்றும் செய்யாமல் விட்டு விடுகிறேன்'' என்றான்.

போதிசத்வரும் ''இந்தக் குற்றத்தை செய்தது உங்கள் கோட்டை நாய்கள். அதை நான் நிரூபித்துக் காட்டுகிறேன்'' என்றார் ''அப்படி செய்தால் என் உத்தரவை உடனே

ரத்து செய்கிறேன்'' என அரசன் கூறினான். உடனே போதிசத்வர் கோட்டை நாய்களைக் கொண்டு வரச் சொன்னார். அவற்றிற்கு அவர் கொட்டை முத்து போட்டு அரைத்த விழுதை மோரில் கலந்து குடிக்க வைத்தார்.

சற்று நேரத்திற்கெல்லாம் அந்த நாய்கள் வாந்தி எடுத்தன. அவை எடுத்த வாந்தியில் அவை கடித்துத் தின்று இன்னமும் ஜீரணமாகாத கடிவாளத்தோல் துண்டுகள் வெளியே வந்து விழுந்தன.

அதைக் கண்ட அரசன் ஆச்சரியப் பட்டு நிற்கவே போதிசத்வரும் ''அரசே அரண்மனைப் பணியாட்கள் உங்கள் கோட்டை நாய்களுக்கு சரியான உணவு கொடுப்பதில்லை. உணவுக்காகப் பணம் வாங்கிக் கொண்டு அதில் பெரும் பகுதியை அமுக்கிக் கொண்டு விடுகிறார்கள். அதனால் பசியால் இந்தக் கோட்டை நாய்கள் வாடுகின்றன. நீங்கள் இதை சரி செய்யுங்கள்'' என்றார்.

அரசனுக்கு நாய் வடிவில் போதி சத்வரே வந்திருக்கிறார் என்பது தெரிந்து விட்டது. அவன் போதி சத்வர் உபதேசித்த அறிவுரைகளைக் கவனமாகக் கேட்டான்.

கோட்டைக்குள் நாய்களுக்கு உணவு கொடுக்கப் பொறுப்பேற்ற வர்களை விசாரித்து அவர்கள் குற்ற வாளிகளே எனக் கண்டு அவர்களை வேலையிலிருந்து நீக்கிக் கடுமையாக தண்டித்தான்.

அந்த நாய்களை வளர்க்கும் பணிக்கு புதியவர்களை நியமித்தான். அவன் அவர்களிடம் ''நீங்கள் இந்த நாய்களைக் கண்ணும் கருத்துமாக வளர்த்து வரவேண்டும். தெரிந்ததா?'' என்றும் கூறினான்.

அது மட்டுமல்ல, நாட்டிலுள்ள நாய்களுக்கும் உணவு அளிக்க ஏற்பாடு செய்தான் அந்த அரசன். இவ்வாறு போதிசத்வரின் நற்போதனைகளால் அரசனுக்கும் மற்ற ஜீவராசிகளுக்கும் நல்வாழ்வு கிடைத்தது.





# மகாவிஷ்ணு

பலிசக்கரவர்த்தி பாதாளத்தை அடைந்து அதன் மன்னனான போதிலும் விஷ்ணுவின் பாத கமலங்களையே பூசித்து வந்தான். தேவர்களுக்கு தேவலோகம் கிடைக்க இந்திரனும் தன் பதவியில் மகிழ்ச்சியுடன் இருந்து வரலானான்.

பலிசக்கரவர்த்தியின் அரண்மனை வாயிலை வாமனர் காத்து வந்தார். அப்போது இராவணன் பாதாள லோகத்தைக் கைப்பற்ற வந்தான். அரண்மனை வாசலில் ஒரு குள்ளன் இருப்பதைக் கண்டு அவனால் தன்னை என்ன செய்து விட முடியும் என எண்ணி உள்ளே போக முயன்றான். ஆனால் வாமனர் விசுவரூபம் எடுத்து தன் காலின் கட்டை விரலால் அவனை லேசாகத் தட்டினார். அவ்வளவு தான்! அவன் குட்டிக்கரணங்கள் போட்டவாறே இலங்கையில் போய் விழுந்தான். அதன் பிறகு பாதாளலோகத்தைப் பற்றி அவன் நினைக்கவே இல்லை.

தான் பூலோகத்தில் ஆட்சி புரிந்த பகுதி வளமானதாக இருக்கிறதா என வருடத்திற்கு ஒரு முறை சென்று மகாபலி பார்த்து வந்தான். அவ்வாறு அவனது விஜயத்தை அப்பகுதிகளில் தீபாவளிப் பண்டிகையாகக் கொண்டாடுகிறார்கள். மறுநாள் அவர்கள் பலிசக்கரவர்த்தியைப் பூசித்து வணங்குகிறார்கள். வாமனர் ஆகாய அளவிற்கு உயர்ந்ததால் அவர்கள் ஆகாச தீபங்களை ஏற்றி மகிழ்வார்கள். தென் கடலிலிருந்து முதலில் பூமியின் மீது அடி எடுத்து வைக்கும் இடத்தில் இப்போதும் தீபம் ஏற்றி அவனது வருகையை நல்வரவாகக் கருதி மக்கள் மகிழ்கிறார்கள். பலிசக்கரவர்த்தியின் காலத்தில் அடங்கி



ஒடுங்கி இருந்த சத்திரியர்கள் மெது வாகத் தலை தூக்கலானார்கள். பின்னர் அவர்களது அட்டகாசம் அதிகரிக்க லாயிற்று. பலமுள்ளவன் பலமற்ற வர்களை வாட்டி வதைக்கலானான். இதனால் மக்களின் துயரம் அதி கரித்தது.

அப்போது விஷ்ணு பரசுராமராக அவதாரம் எடுத்தார். அவர் தம் கோடாலியால் இருபத்தோரு தடவை களில் சத்திரியர்களை ஒழித்தார்.

அப்போது ஆண்ட மன்னர்களுள் சிறந்தவனான கார்த்த வீர்யார்ஜுனன் மகாவிஷ்ணுவின் சுதர்சனச் சக்கரத் தின் அம்சமாகப் பிறந்தவன். விஷ்ணு ஆழ்ந்த நித்திரையில் இருந்த போது அவரது திருக்கரங்களில் இருந்த சங்கிற்கும் சக்கரத்திற்கும் பெருத்த வாக்குவாதம் மூண்டது. அப்போது சக்கரம் ''நான் பளபளவெனப் பிரகாசிப்பவன். 'கிர்கிர்' என்று எங்கு வேண்டுமானாலும் சுற்றி வருபவன். எவ்வளவோ துஷ்டர்களின் தலை களை நான் தான் துண்டித்திருக்கி றேன். என்னைக் கையில் கொண்ட விஷ்ணுவை சக்ரபாணி என அழைக் கிறார்கள். நீ எதற்கு லாயக்கு? 'பொம்' 'பொம்' என்று சத்தம் செய்ய தானே தெரியும்?'' என்று ஏசியது.

அது கேட்டு பாஞ்சஜன்யம் என்ற அந்த தெய்வீகச் சங்கு ''அடே சக்கரம்! இப்படி கர்வத்தோடு பேசும் நீ பூவுலகில் தலைக்கு மேல் கர்வம் கொண்ட மன்னனாகப் பிறப்பாய். அப்போது ஒரு முனி குமாரன் விறகு வெட்டும் தன் கோடாலியால் உன் கர்வத்தை அடக்குவான்'' எனச் சபித்தது. அந்த சுதர்சனச் சக்கரம் தான் கார்த்த வீரிய மன்னனாகப் பிறந்து மாபெரும் சாம்ராஜ்யத்தை உருவாக்கி ஆண்டு வந்தான். அவன் தத்தாத் திரேயரின் பரமபக்தன். அவரது அனுக்கிரகத்தால் அஷ்ட சித்திகளை யும் அ டைந்தவன். ப ல ஆ யுதங் களைத் தன் ஆயிரம் கரங்களில் வைத்திருப்பவன்.

இவ்வாறு சூ தமகரிஷி கூ றவே நைமிசாரண்யத்தில் அவரைச் சுற்றி அமர்ந்திருந்த முனிவர்கள் ''முனி சிரேஷ்டரே! தத்தாத்திரேயர் விஷ்ணு வின் அவதாரம் தானே. அந்த அவதாரம் எப்படி ஏற்பட்டதெனக் கூறுங்கள்'' என வேண்டினார்கள். சூதரும் அ து ப ற்றி வி வரமாகக் கூறலானார். அத்திரி முனிவர் தனக்கு ஆண் கு ழந்தை பி றக்க வே ண்டும் என்பதற்காக விஷ்ணுவைக் குறித்துத் தவம் புரிந்தார். அப்போது விஷ்ணு

பிரம்மாவுடனும் சிவனுடனும் சேர்ந்து வந்து அவர் முன் தோன்றி ''நானும் இவர்களும் ஒன்று தானே. எனவே திரி மூர்த்திகளான நாங்கள் ஒன்று பட்ட அம்சமாகத் திகழும் ஒரு குழந்தையாகப் பி றக்கிறோம். அதற்கு தத்தாத்திரேயர் என்ற பெயர் இருக்கட்டும்'' என்றார். பின்னர் மூவரும் மறைந்தனர்.

இதே சமயம் நாரதர் பார்வதி, லட்சுமி, சரஸ்வதி ஆகிய மூவரையும் கண்டு அத்திரி முனிவரின் மனைவி அனசூயை மகாபதிவிரதை என்று கூறினார். அவள் பல அற்புதங்கள் புரிந்ததை எடுத்துக் கூறினார். கங்கையைப் பிடித்து பாவங்களைப் போக்கினாள். நாரதர் கொடுத்த இரும்புக் கடலைகளை வேக வைத்து சுண்டல் ஆக்கி கொடுத்தாள். சூரியனே உதிக்கக் கூடாது எனச் சபித்த சுமதிக்கு ஆறுதல் கூறி சூரியனை உதிக்கச் செய்து இறந்த அவளது கணவனை உயிர்ப்பித்துக் கொடுத்தாள்.

இதை எல்லாம் கேட்கக் கேட்க அந்த மூவருக்கும் அனசூயை மீது பொறாமையும் வெறுப்பும் ஏற் பட்டது. அவர்கள் தம் கணவன் களிடம் அனசூயையைப் பரீட்சிக்கு மாறு கூறி அனுப்பினார்கள். மூவரும் முனிவர்களாக மாறி அத்திரி முனிவ ரின் ஆசிரமத்திற்குச் சென்றார்கள்.

அப்போது அத்திரி முனிவர் ஆசிரமத்தில் இருக்கவில்லை. ஆசிர மத்திற்கு வந்த அந்த முனிவர்களை உபசரிக்கும் பொறுப்பு அனுசூயை யினுடையதாக ஆயிற்று. அவள் அவர்களுக்குரிய மரியாதைகள் செய்து உணவு உண்ண அழைத்தாள்.

அப்போது மூவரும் சிரித்தவாறே





''உணவு ஏற்கத் தடை இல்லை. ஆனால் நாங்கள் ஒரு வழக்கத்தை மேற்கொண்டிருக்கிறோம். அதன்படி'' என்று இழுத்து ''நீ ஆடை எதுவும் அணியாமல் எங்களுக்கு உணவு பரிமாற வேண்டும்'' என்றார்கள்.

அந்த விசித்திர வேண்டுகோளைக் கேட்டதுமே அனுசூயைக்கு வந்திருப்பவர்கள் யார் என்று தெரிந்து விட்டது. அவள் சற்றும் தயங்காமல் ''ஓ! அப்படியே செய்கிறேன்'' எனக் கூறி அவர்களின் மீது கொஞ்சம் நீரை எடுத்துத் தெளித்தாள். மறு வினாடியே அவர் கள் பச்சிளம் குழந்தைகளாக மாறி விட்டனர். அதன் பின்னர் அனுசூயை அவர்களைத் தன் மடியில் படுக்க வைத்து பாலும் சாதமும் கொடுத்தாள். பின்னர் அவர்களைத் தொட்டிலில் போட்டுத் தாலாட்டித் தூங்க வைத்தாள்.

அப்போது ஒரு வெண்ணிறக் காளையும் ஒரு கருடபட்சியும் ஒரு அன்னப் பறவையும் அந்த ஆசிரம வாசலில் வந்து நின்றன. புள்ளிகளும் நான்கு வித நிறங்களும் கொண்ட நாய்க் குட்டிகள் வால்களை ஆட்டிய வாறே ஓடி வந்தன. அதன் பின் நாகப் பாம்பு படம் விரித்து ஆடியவாறே வந்தது.

இவற்றின் பின்னால் நாரதர் வீணையை இசைத்து கொண்டு அந்த ஆசிரமத்துள் வந்தார். அவர் பின்னால் பார்வதியும் இலட்சுமியும் சரஸ்வதியும் வந்தனர். அவர் அனுசூயையிடம் ''அம்மணீ! இவர்கள் மூவரும் கணவர்களைக் காணாமல் தேடி இங்கு இருப்பதாக அறிந்து வந்திருக்கிறார்கள். அவரவரது கணவரை அவரவரிடம் கொடுத்து விடுங்கள்'' என்றார்.

அனுசூயையும் அவர்கள் மூவரையும் வணங்கி ''நான் கொடுப்பதா! அவரவர்கள் அவரவரது கணவரை எடுத்துக் கொள்ளலாமே. இதோ இந்தத் தொட்டில்களில் குழந்தைகளாகப் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறார்கள்'' என்றாள். அவர்கள் மூவரும் உடனே ஓடிப் போய் பார்த்தனர். மூன்று குழந்தைகளும் ஒரே அச்சில் வார்த்த தங்கப் பதுமைகள் போல இருந்தன. அவர்களில் யார் சிவன், யார் விஷ்ணு, யார் பிரம்மா எனக் கண்டு பிடிக்க முடியாமல் அவர்கள் விழித்தனர்.

அப்போது நாரதர் ''என்னம்மா இது? உங்கள் கணவர்களைக் கூட உங்களால் அ டையாளம் க ண்டு

அடைய முடியவில்லையா? வெட்க படாமல் சட்டென உங்கள் கணவரை எடுங்கள். உடனே உண்மை உருவை அவர்கள் அடைந்து விடுவார்கள்'' என்றார்.

அவர்களும் ஆனது ஆகட்டும் என ஆளுக்கு ஒரு குழந்தையை எடுத்துக் கொண்டனர். அப்போது பார்வதியின் கையில் பிரம்மாவும் லட்சுமியின் கையில் சி வனும் ச ரஸ்வதியின் கையில் விஷ்ணுவும் இருந்தனர். இதைக் கண்டு நாரதர் கொல்லென்று சிரித்தார். பிரம்மாவும் விஷ்ணும் சிவனும் அப்போது ஒன்று சேர்ந்து நின்றார்கள்.

இந்த சமயத்தில் அத்திரி முனிவர் தம் ஆசிரமத்திற்கு வந்தார். தன் வீட்டில் திரிமூர்த்திகள் நிற்பது கண்டு அவர்களை வணங்கி நின்றார். ஒருபுறம் பிரம்மாவும் மறுபுறம் சிவனும் இருக்க நடுவில் விஷ்ணு நின்றார். ஆறு கைகளில் சங்கும் சக்கரமும் கதையும் தாமரையும், திரிசூலமும் க மண்டலமும் இ ருந் தன. தோள்களில் ஜோல்னா பைகள் தொங்கின. இந்த அவதாரம் தான் தத்தாத்திரேய அவதாரம். அத்திரி அனுசூயையின் குழந்தையாகப் பிறந்த அவதாரம்.

நாரதர் தத்தாத்திரேயரைத் தொழு தார். சிவனாரின் நந்தி காளையாகவும், நான்கு வேதங்கள் நான்கு நாய் களாகவும், பாம்பும், கழுகும், அன்னமும் சூழ தத்தாத்திரேயர் திரிந்துவரலானார். அவரை முனிவர் களும் யோகிகளும் வணங்கினார்கள். தத்தாத்திரேயர் கார்த்தவீரிய மன்னர்



அவர்களின் குலதெய்வமாகி விளங் கினார்.

கார்த்தவீரியன் தத்தாத்திரேயரை வணங்கி விட்டு பெரிய படையுடன் திக்விஜயம் செய்யக் கிளம்பினான். ஜமதக்கினி முனிவரின் கடைசி புதல்வன் த ான் ப ரசுராமர். அ வர் கையில் எப்போதும் கோடாலி இருக்கும். அவர் இமயமலைக்குப் போய் தவம் செய்து சிவபிரானின் அருளால் அந்த சக்திவாய்ந்த கோடா லியைப் பெற்றார்.

ஒரு முறை அவரது தாய் ரேணுகா தேவி நீராட நதிக்குச் சென்றாள். வெகு நேரமாகியும் தன் மனைவி திரும்பி வராதது கண்டு ஜமதக்கினி முனிவர் தம் ஞான திருஷ்டியால் என்ன நடந்தது என்று தெரிந்து கொண்டு விட்டார். சித்திரரதன் என்ற கந்தர்வன் தன் மனைவிகளுடன் ஜலக்கிரீடை செய்து கொண்டிருந்

ததை ரேணுகா மெய்மறந்து நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். இதனால் அவருக்குக் கடுங்கோபம் வந்து விட்டது. ரேணுகா ஆசிரமத்திற்குத் திரும்பி வந்ததும் ஜமதக்கினி முனிவர் தம் புதல்வர்களிடம் அவளது தலையை வெட்டி எறியுமாறு கூறினார்.

பரசுராமரின் தமையன்மார்கள் அனைவரும் அவ்வாறு செய்ய மறுத்தனர். அதனால் ஜமதக்கினி முனிவர் பரசுராமரிடம் ''நீ உன் தாயின் தலையையும் உன் தமையன் மார்களின் தலைகளையும் வெட்டி எறி'' எனக் கூறினார்.

பரசுராமர் சற்றும் தயங்காமல் தன் தந்தையின் கட்டளைப் படி அவர்களது தலைகளை வெட்டி எறிந்தார். அது கண்டு மகிழ்ந்த ஜமதக்கினி முனிவர் அவரைப் புகழ்ந்து ''உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்'' என்றார். பரசுராமரும் ''என் தாயாரும் அண்ணன்மார்களும் உயிர் பெற்று வர வேண்டும்'' என்று கேட்டார்.

ஜமதக்கினி முனிவரும் அவ்வாறே அவர்களை உயிர்ப்பித்தார். பரசுராமரை நெடுங்காலம் வாழ ஆசீர் வதித்தார். கார்த்தவீரியன் தன் திக்விஜயத்தை முடித்துக் கொண்டு தன் தலை நகருக்குத் திரும்பும் வழியில் ஜமதக்கினி முனிவரின் ஆசிரமத்தைக் கண்டான். அப்போது அவனுக்கும் அவனது படையினருக்கும் நல்ல பசி. ஜமதக்கினி முனிவர் காமதேனுவுக்குச் சமமான தன் யாகப் பசுவைக் கொண்டு கார்த்தவீரியனுக்கும் அவனது படை வீரர்களுக்கும் வேண்டிய உணவுப் பொருள்களை வரவழைத்துக் கொடுத்தார். அவர்களும் நல்ல விருந்து சாப்பாடு சாப்பிட்டார்கள்.

அந்த மாதிரிப் பசு தன்னிடம் இருந்தால் தன் படை வீரர்களுக்கு எப்போதும் உணவளித்துக் கொண்டு இருக்கலாம் எனக் கார்த்தவீரியன் எண்ணித் தன் வீரர்களிடம் அப் பசுவைத் தன் தலைநகரான மாகிஷ்மத நகருக்கு இழுத்துச் செல்லுமாறு கட்டளையிட்டான். வீரர்கள் தன் யாகப் பசுவை இழுப்பது கண்டு ஜமதக்கினி முனிவர் குறுக்கிட்டுத் தடுத்தார். அவர்கள் அவரைக் கீழே தள்ளி விட்டு யாகப்பசுவை அங்கே இருந்து தலைநகருக்கு இழுத்துச் சென்றார்கள்.



# சியான் சைதின் தந்திரம்



ஸ்காட்லாந்து இயற்கை எழில் நிரம்பிய ஒரு அழகான நாடு. அந்த நாட்டின் வ டக்குப் ப குதியில் மலைகளும் தெற்குப் பகுதியில் சமவெளியும் இருந்தன.

மலைகள் சூழ்ந்த வடக்குப் பகுதி கண்ணுக்கு ரம்மியமான காட்சி களைத் தரும் அழகான பூமி. வரிசையாக ம லைத் தொடர் களும் நடுநடுவே சமமான சிறு பகுதிகளும் பளிங்கு போன்ற நீருள்ள ஓடை களும் சுனைகளும் ஒன்று சேர்ந்து அது கண்களையும் கருத்தினையும் கவரும் பகுதி யாக இருந்தது. அந்த மலைப் பகுதியில் வாழ்க்கை இயற்கையின் கட்டுப் பாட்டில் இருந்தது.

ஆனால் எவ்வளவு இயற்கை அழகுகள் இருந்தனவோ, அந்த அளவுக்கு தினசரி வாழ்க்கைக்கு இடையூறுகளும் ப ல இ ருந்தன. மலைகளும், பாறைகளும், சம வெளிப் பிரதேசங்களும் மாறி மாறி அமைந்திருந்த அந்தப் பகுதியில் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல சரியான சீரான பாதைகள் கிடையாது. கடுங்குளிர் வீசும், பாறைகள் நிறைந்த மலைப் பகுதிகளில் நெல், கோதுமை பயிரிட்டு விவசாயம் செய்வது கடினம். நடு நடுவே பள்ளத்தாக்கு கள், ஓடைகள் உள்ள இடங்களில் மட்டுமே வாழ்க்கை நடத்த முடியும். சில இடங்களில் சமவெளிப் பிரதேச ங்களிலும் ஒரேயடியாகப் பாறைகள் மேலிருந்து கீழே விழுந்து மூடி இருக்கும். இதைப் பற்றி ஓர் அழகிய கதையும் உண்டு.

பல ஆண்டுகளுக்கு முன் அங்கிருந்த ஒரு சிறிய பள்ளத்தாக்கில் மக்கள் சிலர் வசித்து வந்தனர். பயிரிட அங்கே ச மவெளியே இ ல்லாமல்,

அந்தப் பகுதி முழுதும் பெரிய பெரிய பாறைகள் குவிந்து இருந்தன. ஆகவே அங்குள்ள மக்கள் பயிரிட முடியா மல் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டி ருந்தனர். மற்ற குடியிருப்புப் பகுதி களிலிருந்து விலகி ஒரு சிறிய குடிசையில் சியான் சைத் என்ற ஒரு வயதான கிழவன் வசித்து வந்தான். மிக அறிவாளியான அந்தக் கிழவன் தன் அறிவின் திறன், அனுபவம் இரண்டையும் கொண்டு அந்த மக்களின் பல சிக்கல்களுக்கு எளிதாகத் தீர்வு காண்பதுண்டு.

ஒருநாள் அங்குள்ள மக்கள் வாழ்க்கையில் சலிப்படைந்து அந்த இடத்தைவிட்டு வேறு இடத்திற்குச் சென்று குடியேறத் தீர்மானித்தனர். அதற்குமுன் பயிரிட இடையூறாக இருக்கும் பாறைகள் நிறைந்த அந்த நிலத்தின் பி ரச்சினைக்கு ஏ தாவது தீர்வு காண முடியுமா என்று அறிய சியான் ை சதைத் ே தடி வ ந்தனர். ''ஐயா, இங்கு விவசாயம் செய்வது மிகவும் கடினமாக உள்ளது. இங்குள்ள எல்லாப் பாறைகளையும் அகற்றினால்தான் நிலத்தில் பயிரிட முடியும். நாங்கள் அனைவரும் சேர்ந்து முயற்சி செய்தாலும், இதை ஒரு விவசாய நிலமாக்கப் பல ஆண்டுகள் பிடிக்கும். ஆகவே இந்த இடத்தை விட்டுப் போய் விடலாம் என்று யோசிக்கி றோம். உங்கள் கருத்து என்ன?'' என்றனர்.



சியான் சைத் சற்று யோசித்து விட்டு ''இங்குள்ள நிலம் மிகவும் சத்துள்ளது. இங்கு பயிரிட்டால் நன்கு விளையும். உங்களுக்கு இடையூறாக உள்ள பாறை களை அகற்ற வேண்டும். அவ்வளவு தானே! செய்து விடலாம்'' என்றான்.

அருகிலுள்ள உயரமான மலையில் இரு அரக்கர்கள் இருந்தது சியான் சைதுக்கு ஞாபகம் வந்தது. யார்



பலசாலி என்று அறிய ஒருவருக் கொருவர் அடிக்கடி சண்டை யிட்டுக் கொள்வதுண்டு. உடனே சியான் சைத் அந்த இரண்டு அரக்கர்களைத் தேடிப் புறப்பட்டான்.

அவன் தேடிச் சென்ற அரக்கர்கள் அப்போதும் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். சியான் சைத் அவர் களை நோக்கி, ''நீங்கள் இப்படி சண்டையிடுவதால் ஒரு பயனும் இல்லை. நீங்கள் நானிருக்கும் இடத்திற்கு வாருங்கள். கிராம மக்கள் முன்னிலையில் உங்களுக்கு ஒரு போட்டி வைப் பேன். அதில் யார் வெற்றி பெறு கிறார்களோ அவனே பலசாலி'' என்றான். அரக்கர்களும் ஒப்புக் கொண்டு பள்ளத்தாக்கிலுள்ள கிராமத்திற்கு வந்தனர்.

மறுநாள் காலை கிராமத்து மக்கள் அனைவரும் கூடினர். சியான் சைத் அரக்கர்களை நோக்கி, ''எங்கே, இந்த சிறிய கற்களை உங்களால் எவ்வளவு தூரம் எறிய முடியும் என்று பார்க்க லாமா?'' எனக்கேட்க இருவரும் உற்சாகத்துடன் சிறிய கற்களை தூக்கி வெகு தூரத்தில் எறிந்தனர். சியான் சைத் '' சபாஷ், இருவருமே பலசாலிகளாகத் தான் இருக்கிறீர்கள். ஆனால் இதை வைத்து யார் பலசாலி என்று தீர்மானிக்க முடியாது. எங்கே, பெரிய பாறைகளை எடுத்து அதோ அந்த மலைச் சிகரத்தைத் தாண்டி எறியுங்கள்'' என்றான்.

அரக்கர்கள் உற்சாகத்துடன் பெரிய பாறைகளில் பலவற்றை அனாயாச மாகத் தூக்கி எறிந்தனர். கிராமத்து மக்கள் இருபது பேர் சேர்ந்தால் கூட தூக்க முடியாத பாறைகள் அவை. ஆனால் சியான் சைத் திருப்தி அடைய வில்லை. ''வாருங்கள், இங்கே பெரிய மைதானம் உள்ளதல்லவா, இங்கே ஏராளமான சிறிய கற்களும் பாறைகளும் உள்ளன. இவை அனைத்தையும் பொறுக்கித் தூக்கி எறிய வேண்டும். முதலில் இடது கையால் பொறுக்கி எறியுங்கள். பிறகு வலது கையால் எறியுங்கள். யார் அதிகமாக பாறைகளைப் பொறுக்கி எறிகிறார்களோ, அவரே

பலசாலி'' என்றான். அரக்கர்கள் மீண்டும் உற்சாகத்துடன் போட்டியில் ஈடுபட்டனர். முதலில் இருவரும் இடது கையால் ெ பாறுக்கி பல பாறைகளையும் கற்களையும் எறிந்தனர். இந்த முயற்சியிலேயே பாதி மைதானம் காலியாகி விட்டது. பிறகு வலது கையைப் பயன்படுத்தினர். இப்போது பூமியில் விழுந்திருந்த பாறைகள் ஏறக்குறைய காலியாகி விட்டன. ஆயிற்று, இப்போது தீர்ப்பு சொல்லும் நேரம் நெருங்கி விட்டது. சியான் சைத் யோசித்தான். ஒருவன் பலசாலி என்று தீர்ப்பு சொன்னால், மற்றவன் தன்மீது கோபப்படுவான். என்ன செய்யலாம்? சியான் சைத் கொஞ்சம் யோசித்த பிறகு, ''அடடா, நீங்கள் ஒவ்வொருவரும் முறையே எத்தனை பாறைகளை எறிந்தீர்கள் என்று கணக்கிடும் போது தவறு நேர்ந்து விட்டது. ஆகவே இப்போது ஒன்று செய்யலாம். உங்களில் யார் ஒருவர் எறிந்த பாறை வெகு தூரத்தில் விழுந்துள்ளதோ, அவரே பலசாலி. நீங்கள் இருவரும் போய் நீங்கள் எறிந்த பாறைகள் எங்கே விழுந்தன, எது அதிக தூரத்தில் உள்ளது. அது யார் எறிந்தது என்று கண்டு பிடித்து விட்டு வாருங்கள். பிறகு தீர்ப்பு சொல்கிறேன்'' என்று சாமர்த்தியமாகப் பேசி இரண்டு அரக்கர்களையும் அனுப்பி விட்டான்.

யார் எறிந்த பாறை எவை என்று கண்டு பிடிப்பதே கடினம் என்றும், இவ்வாறு செய்ய பல மாதங்கள் பல ஆண்டுகள் ஆகும் என்றும் சியான் சைதுக்குத் தெரியும். பாவம், அரக்கர்களுக்கும் சியான் சைத் தனது நோக்கம் நிறைவேறுவதற்காக இவ்வாறுத் தங்களைப் போட்டியில் ஈடுபடுத்தியுள்ளான் என்று புரியவில்லை.

எப்படியோ, அரக்கர்களும் போய் விட்டனர். விவசாயம் செய்ய வேண்டிய நிலமும் பாறைகளின்றி சீராக கிடைத்துவிட்டது. கிராமத்து மக்கள் இதற்காக எந்த சிரமமும் படவில்லை. சியான் சைதின் சாமர்த்தியத்தை வானளாவப் புகழ்ந்து விட்டு கிராமத்து மக்கள் விரைவாக தங்கள் விவசாயத்தைத் தொடங்கி அந்தப் பாறைகள் நிறைந்த பூமியை பொன் விளையும் பூமியாக மாற்றினர்.





# கருமியும் பாம்பாட்டியும்

ஒரு கிராமத்தில் குருநாதன் என்ற பெரிய பணக்காரன் இருந்தார். ஆனால் ஒரு பைசா கூட தன் கையில் இருந்து செலவழிக்க விரும்பாத கருமியாக இருந்தார்.

ஒருமுறை அந்த கிராமத்துக்கு ஒரு வேடதாரி பிச்சைக்காரன் வந்தான். பல வேடங்கள் சாமர்த்தியமாக தரித்து பிச்சையெடுப்பதைத் தன் தொழிலாகக் கொண்டிருந்தான். பல வீடுகளுக்குச் சென்று பிச்சை கேட்ட அவன் குருநாதன் வீட்டு வாசலிலும் நின்று சன்னியாசி வேடம் பூண்டு பிச்சை கேட்டான்.

''ஐயா, தருமம் செய்யுங்கள்'' என்ற குரலைக் கேட்டு வெளியே வந்த குருநாதனுக்கு சன்னியாசியைப் பார்த்ததும் மிகவும் கோபம் வந்தது. ''ஏனப்பா! நீ என்ன குருடனா இல்லை நொண்டியா? பிச்சை கேட்க உனக்கு வெட்கமாயில்லை?'' என்று திட்டி விட்டு கதவை மூடி விட்டார். மறுநாள் மீண்டும் அந்தப் பிச்சைக்காரன் குருடனைப் போல் வேடம் பூண்டு குருநாதன் வீட்டில் பிச்சை கேட்டான். குருநாதன் அன்றும் பிச்சை போடாமல் அவனை விரட்டி விட்டார்.

பிச்சைக்காரன் விடுவதாக இல்லை. மறுநாள் வேறு வேடம் புனைந்து குருநாதன் வீட்டு கதவைத் தட்டினான். ஊமை போல் நடித்த அவனை குருநாதன் அன்றும் கோபத்துடன் விரட்டி விட்டார்.

மறுநாள் குருநாதனின் மனைவி சமையல் செய்து கொண்டிருக்கும் போது சமையல் அறையில் திடீரென ஒரு பாம்பைப் பார்த்தாள். ''ஐயோ பாம்பு'' என்று அலறிக் கொண்டே வெளியே ஓடி வந்து குருநாதனைக் கூப்பிட்டாள். சமையல் அறைக்குள் பாம்பினைப் பார்த்த குருநாதனும் ''பாம்பு, பாம்பு, காப்பாற்றுங்கள்'' என்று அக்கம் பக்கத்து வீடுகளுக்குக் கேட்கும்படி உரத்தக் கூவினார். அடுத்த சில நிமிடங்களில் பல

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -



மனிதர்கள் அவர் வீட்டின் முன் கூடி விட்டனர்.

அப்போது தெருவில் ஒரு பாம் பாட்டி சென்று கொண்டிருந்தான். குருநாதனுக்கு அவனைக் கண்டதும் உயிர் வந்தது. ஓடிப் போய் அவன் கால்களில் விழாத குறையாய் ''பாம் பாட்டியே, தயவு செய்து எங்கள் வீட்டில் நுழைந்து விட்ட பாம்பைப் பிடி'' என்று கெஞ்சினார். பாம்பாட்டி யும் குருநாதனுடன் சமையல் அறைக்குள் நுழைந்தான். ஆனால் பாம்பைக் காணவில்லை.

''ஆகா இது ரொம்ப ஆபத் தாயிற்றே. அது மட்டும் நாகப் பாம்பாயிருந்தால் மிகவும் ஆபத்து.'' என்று பாம்பாட்டி பயமுறுத்த குருநாதன் குளிர்ஜுரம் கொண்டவர் போல் நடுங்கினார். ''அப்பா, புண்ணி யமாகப் போகட்டும். நீ பாம்பை பிடித்துவிடு. எவ்வளவு கேட்டாலும் நான் தருகிறேன்'' என்றார். ''சரி, ஐநூறு ரூபாய் கொடுங்கள்'' என்றான் பாம்பாட்டி. ''ஐநூறா!'' என்று நிஜமாகவே பாம்பு கடித்ததைப் போல் அதிர்ச்சியுற்றார் குருநாதன். பாம்பாட்டியைக் கெஞ்சி கூத்தாடி நூறு ரூபாய்க்கு சம்மதிக்க வைத்தார். பாம்பாட்டி மகுடியை எடுத்து ஊத ஆரம்பித்ததும் சில நிமிடங்களி லேயே சமையல் அறையில் ஓர் இடுக்கிலிருந்து பாம்பு வெளிப் பட்டது. பாம்பை எளிதாகப் பிடித்த பாம்பாட்டி நூறு ரூபாயை வாங்கிக் கொண்டு பாம்பையும் எடுத்துச் சென்று விட்டான்.

ஒருவாறாக பாம்பு பிடிக்கப் பட்டதை நினைத்து குருநாதன் நிம்மதி அடைந்தார். இருந்தாலும் ஒரு பாம்புக்காக நூறு ரூபாய்

செலவானதை நினைத்து வருத்தமும் இருந்து கொண்டே இருந்தது. ஓரிரு நாட்களில் அந்த வருத்தம் பேரதிர்ச்சி யாக மாறியது. ஏனென்றால் அவர் வீட்டுக்கு வந்து பாம்பைப் பிடித்த பாம்பாட்டி வேறு யாருமில்லை, அவர் வீட்டுக்குப் பல நாட்களாக பல வேடங்களில் வந்து பிச்சை கேட்ட அதே ஆள்தான் என்று தெரிந்தது.

அவர் வீட்டினுள் நுழைந்த பாம்பு பிச்சைக்காரனுடைய வளர்ப்புப் பாம்பு என்றும் வேண்டுமென்றே அவர் வீட்டினுள் அதை நுழைய விட்டு தன்னை ஏமாற்றிப் பணம் பறித்து விட்டான் என்று அறிந்த போது அவர் அடைந்த ஆத்திரத்திற்கு அளவே இல்லை. வில்லிலிருந்து விடுபட்ட அம்புபோல் நேரே கிராமத்து நாட்டாமையிடம் குருநாதன் புகார் செய்ய நாட்டாமையின் உத்தரவின் பேரில் அந்தப் பிச்சைக் காரன் பிடித்து இழுத்து வரப் பட்டான். உண்மையை நாட்டாமை யிடம் ஒப்புக் கொண்ட அவன், ''ஐயா, நீங்களே சொல்லுங்கள். பணக்காரரான குருநாதன் எங்களைப் போல் ஏழைகளுக்கு உதவி செய்யா விடில் வேறு யார் செய்வார்கள்?'' என்று முறையிட்டான்.

நாட்டாமை பிச்சைக்காரனை நோக்கி, ' 'மற்றவர்கள் விரும்பிக் கொடுக்கும் பணத்தை ஏற்றுக் கொண்டாயானால், எனக்கு ஆட்சே பமில்லை. ஆனால் நீ குருநாதனை ஏமாற்றிப் பணம் பறித்தாய். ஆகவே அவருடைய பணத்தை நீ திருப்பிக் கொடுத்து விடு'' என உத்தரவிட்டார்.

பிறகு குருநாதனை நோக்கி, ''செல்வந்தரான உங்களை நாடி ஏழை மக்கள் தங்கள் பசிக் கொடுமையால் உந்தப் பட்டு உதவி கேட்டு வருவார்கள். அவர்களை ஆதரிக்க வேண்டியது உங்கள் கடமை. ஆகவே அந்தப் பிச்சைக்காரனுக்கு இருபத்தி ஐந்து ரூபாய் இனாம் கொடுத்து விடுங்கள்'' என்றார். குருநாதன் உடனே அந்த இனாம் தொகையைப் பிச்சைக்காரனுக்குக் கொடுத்து விட்டார். ஆனால் நாட்டாமை கூறிய சொல் அவர் மனதில் ஆழப்பதிந்தது. அன்றிலிருந்து அவர் தனது கருமித்தனத்தை விட்டு விட்டு, ஏழைகளுக்கு உதவிக்கரம் நீட்டத் தொடங்கிவிட்டார்.



# முன்கோபியும், கோழையும்

**மா**ஞ்சாலம் என்ற கிராமத்தில் பலபத்திரன் என்று ஒரு விவசாயி இருந்தான். அவன் மிகவும் முன்கோபக்காரன். எல்லோரிடமும் அற்ப விஷயங்களுக்குக் கூட எரிந்து விழுவான். தன் முன்னிருப்பவர் முதியவரோ, அறிவாளியோ யாராயிருந்தாலும் தன்னிடம் அவர் ஏதாவது கூற முயன்றாலே போதும். உடனே, ''நீ யார் எனக்கு புத்தி சொல்வதற்கு? நீ காசியில் படித்த பண்டிதனா? இல்லை ராமேஸ்வரம் சென்று திரும்பிய புண்ணியவானா?'' என்று சீறி விழுவான்.

குளிர்காலத்தில் ஒருநாள் பலபத்திரன் ஒரு போர்வையினால் தன் உடலைப் போர்த்திக் கொண்டு மற்ற கிராம மக்களுடன் சேர்ந்து எரியும் தீ முன் அமர்ந்து குளிர் காய்ந்து கொண்டிருந்தான். அப்போது அவனது போர்வையின் ஒரு மூலையில் தீப்பிடித்துக் கொண்டது. அதை பலபத்திரன் கவனிக்கவில்லை. ஆனால் அவன் அருகில் இருந்த கிட்டு பார்த்து விட்டான். பார்த்தும் கூட பலபத்திரனுக்கு அதைச் சுட்டிக்காட்டி எச்சரிக்கை செய்ய கிட்டு தயங்கினான். பலபத்திரன் தான் யார் அவனிடம் பேசினாலும் சிடுசிடுவென்று எரிந்து விழுவானே!

ஆனால் தீ நன்றாகப் பிடித்துக் கொண்டும் பலபத்திரன் கவனிக்காமல் இருக்கவே, கிட்டு தயங்கிக் கொண்டே 'பலபத்திரா! உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல அனுமதிப்பாயா?'' என்று கேட்டான். ''என்ன தைரியம் இருந்தால் என்னிடம் இப்படி கேட்பாய்?'' என்று காரணமே இல்லாமல் சீறினான் பலபத்திரன். ஆனால் இதற்குள் தீ நன்றாகப் பிடித்துக் கொள்ளவே, பலபத்திரன் துள்ளியெழுந்து தன் போர்வையை கழற்றி எறிந்தான். ''அட முட்டாளே! முன்னமே ஏன் என்னிடம் சொல்லவில்லை?'' என்று கிட்டுவைப் பார்த்துக் கத்தினான்.

உடனே கிட்டு, ''பலபத்திரா! நான் எப்படி சொல்வேன்! நான் காசியில் சென்று படித்ததுமில்லை. ராமேஸ்வரம் சென்ற புண்ணியவானும் இல்லை. சிடுமூஞ்சியான உன்னிடம் பேசினாலே ஆபத்து ஆயிற்றே!'' என்று முகத்தில் அடித்தாற்போல் பதில் கூறினான்.



சாந்திபுரத்தின் அரியணையைக் கவர்ந்து கொண்ட வீரசிம்மன் தன் திட்டங்கள் எல்லாம் தோல்வியுறுவதைக் கண்டு கவலையில் ஆழ்கிறான். ஜமீன்தார்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட அரிசியைக் கொண்டு ஆயுதங்கள் வாங்க முயற்சி செய்தும் பலன் இல்லாமல் போகிறது. அரசவையில் எங்கிருந்தோ பாய்ந்து வந்த ஓர் அம்பு ஓர் எச்சரிக்கையை விடுக்கின்றது. அவையிலேயே யாராவது ஒற்ற ர்கள் இருக்கிறார்களா என்ற சந்தேகம் எழுகிறது. [illegible] எச்சரிக்கப் படுகின்றனர்.

12

# சூர்யா

வீர இளவரசனின்
துணிகரச் செயல்கள்

ஓவியம் : காந்தி அய்யா

பல ஆண்டுகள் கழிந்தன. ஜெயாநந்தரால் வளர்க்கப்பட்ட குழந்தைக்கு சூர்யா என பெயரிடப்படுகிறது. சூர்யாவிற்கு ஐந்து வயது நிரம்புகிறது.

அட, காடு இவ்வளவு அழகாக இருக்கிறதே!

போலா யானை எப்போதும் சூர்யாவைத் தூக்கி சுமக்கிறது. மல்லிக்கிளி அவனை கவனித்துக் கொண்டேயிருக்கிறது.

ஏய் என்னை எங்கே கொண்டு செல்கிறாய்?

சாவகன் புலி சூர்யாவின் தோழன் ஆகிறது.

வர்த்தன சீல முனிவர் சூர்யாவுக்கு கல்வி கற்பிக்கிறார்.

தியானமும் பிரார்த்தனையும் சேர்த்து செய்ய வேண்டும்

ஓம்! ஓம்! ஓம்!

இயற்கை இறைவனின் வடிவம் ஆகும்



மாலை நேரங்களில் ஜெயாநந்தர் சூர்யாவை மலை சிகரங்களுக்கு அழைத்துச் செல்கிறார். சூர்யா அறியாமல் அவனுக்கு தன்னுடைய சக்திகள் சில அளிக்கிறார்.
ஒரு நாள் மாலை...
குருவே, என்னுடைய அன்னை யார்? தந்தை யார்?
நீ ஓர் அபூர்வப் பிள்ளை
நீங்கள் தான் என் தந்தை. இயற்கை எனது தாய்
குழந்தாய், நீ வயதுக்கு மீறிய புத்திசாலியாக இருக்கிறாய்
இறைவனுடைய அருள் உனக்கு எப்போதும் இருக்கும்
அப்பா நான் இன்று மிக மகிழ்ச்சியாய் இருக்கிறேன்
யாரோ ஓர் அந்நியன் சூர்யாவை தொலைவிலிருந்து உற்றுப் பார்ப்பது ஜெயாநந்தருக்குத் தெரிகிறது.
அந்தப் பையன் யாராக இருக்கும்?
என்னுடைய ஆசிரமத்திற்கு உங்களை வரவேற்கிறேன்
நீங்கள் யாரைத் தேடுகிறீர்கள்? உங்களுக்கு ஏதாவது உதவி தேவையா?
ஆமாம்...
என் முன்னே இருப்பது ஜெயாநந்த முனிவர் எனில், அவருக்கு என் வணக்கங்கள்.
உங்களுடைய ஊகம் சரியே


அந்தச் சிறுவன் யார் என்று சொல்வீர்களா?
நீங்கள் யார் என்று தெரிந்தால்தான் உங்கள் கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியும்.


அந்த அந்நியன் தன் முகத்திரையை அகற்றுகிறான்
மகாராஜா, அது உங்களுடைய மகன்தான்
ஹா! என்னுடைய மகனா?


ஐந்து ஆண்டுகளில் எவ்வளவு வளர்ந்து விட்டான்!
அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருப்பதை கவனிக்காமல் சூர்யா விளையாடிக் கொண்டு இருக்கிறான்.


என்னுடைய சேனாபதி என் மனைவியையும் மகனையும் என்னையும் கொன்று விட முயற்சி செய்தான். எங்களுக்கு என்ன ஆயிற்று என்று அவனுக்குத் தெரியாது. நான் இறந்து விட்டதாக அவன் நினைத்துக் கொண்டு இருக்கிறான்.
நீங்கள் உயிரோடிருந்தால் உங்கள் மனைவியையும் மகனையும் காண ஒருநாள் என்னைத் தேடி வருவீர்கள் என்று எனக்குத் தெரியும். உங்கள் மகனை என் வசம் ஒப்புவித்து விட்டு, ராணி உயிர் நீத்து விட்டாள்.


பிறகு என்ன ஆயிற்று?
ராணி அமைதியாக அந்த சமாதியில் உறங்கிக் கொண்டு இருக்கிறாள். உங்களுடைய மகன் தினமும் அன்னையின் சமாதிக்கு மலர்கள் தூவி வணங்குகிறான்.
சாந்திதேவ மகாராஜா சமாதியை நோக்கி விரைகிறார்
மனம் உடைந்து நெஞ்சம் குமுற கண்ணீர் வடிக்கிறார்
என் ராணி! உன்னை என்னால் காப்பாற்ற முடியாமல் போய் விட்டதே!


ஜெயாநந்தர் அருகில் அமர்ந்து மன்னனுக்கு ஆறுதல் அளிக்கிறார்.


சற்று நேரத்தில் ஆறுதல் அடைந்த மன்னன் திடீரென்று...
நான் என் மகனை சந்திக்கலாமா?
நிச்சயமாக. ஆனால் நீங்கள் தான் அவன் தந்தை என்று தெரிந்து கொள்ள அவனுக்கு கடினமாக இருக்கும்
நீங்கள் சொல்வது புரிகிறது முனிவரே
தொடரும்

# கூட்டிணைப்புப் பயணம்

அடுக்கு மாடிக் கட்டடக் குடியிருப்பு ஒன்றில், வீணா கீழ்த்தளத்தில் வசிக்கிறாள். அதே தளத்தில் இன்னும் மூன்று குடியிருப்புக்கள் உள்ளன. வீணாவின் வலது பக்கம் திரு தத்தாவும், இடது பக்கம் திரு ஜார்ஜும் வசிக்கின்றனர். எதிர்புறம் திரு கான் அவர்கள் தன் குடும்பத்துடன் வசிக்கிறார். நான்கு குடும்ப தலைவர்களும் தங்கள் அலுவலகத்திற்கு தங்கள் சொந்தக் காரில் தனித்தனியே பயணம் செய்வது வழக்கம்.

ஆனால் சமீபகாலமாக வீணா ஒரு மாறுதலை கவனித்தாள். அவளுடைய தந்தை இப்போதெல்லாம் மாதத்திற்கு ஒரு வாரம் மட்டுமே தன் காரில் செல்கிறார். மற்ற மூன்று வாரங்களும் தன் காரில் பயணம் செல்வதில்லை.

இது வீணாவுக்கு வியப்பை அளித்தது. தன் நண்பர்களுடன் கலந்து பேசிய போது தான் அவளுக்கு உண்மை தெரிய வந்தது. அதாவது ஒரு வாரத்திற்கு ஒருவர் மட்டுமே தன் காரை செலுத்துகிறார் என்றும், மற்ற மூவரும் அவருடன் சேர்ந்து அதே காரில் பயணம் செய்கின்றனர் என்றும் தெரிய வந்தது. மாதத்தின் மற்ற மூன்று வாரங்கள், மற்ற மூவரும் முறை வைத்துக் கொண்டு தங்களது வாகனத்தைச் செலுத்துகின்றனர்.

இதன் காரணத்தை வீணா முழுவதுமாக அறிய விரும்பி இதைப் பற்றி தன் தந்தையிடம் கேட்டாள். அவர், ''வீணா, பெட்ரோல் ஒரு விலை மதிப்பற்ற எரி பொருள். அதன் அளவு நிலத்துக்கு அடியில் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகிறது. எங்களுடைய அலுவலகங்கள் அருகருகே இருக்கும்போது ஒரே காரில் நாங்கள் அனைவரும் செல்வதால் பெட்ரோல் மிகக் குறைவாக செலவாகிறது. இதனால் எங்களுக்கு நிறையப் பணம் மிச்சம் ஆகிறது. தவிர சுற்றுச் சூழல் மாசுபடுவது குறைகிறது. குறைவாக வாகனங்கள் சாலையில் செல்லும் போது போக்குவரத்து நெரிசலும் குறைகிறது'' என்று விளக்கினார்.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்கள் விஞ்ஞானம்

### பாஸ்கராச்சாரியா



கர்நாடக மாநிலத்தில் சஹயாத்ரி மலைத்தொடர்கள் அருகே பிஜியாடா பிடா என்னும் இடத்தில் பிறந்த பாஸ்கராச்சாரியா மிகச் சிறந்த கணி த மேதையாகப் போற்றப்படுகிறார். இவர் பிறந்தது கி.பி.1114ம் ஆண்டில். அவருடைய தந்தை மகேஸ்வரா ஒரு வான சாஸ்திர நிபுணர்.

தனது முப்பதாவது வயதிலேயே பாஸ்கராச்சாரியா தனது மிகச் சிறந்த நூலான சித்தாந்த சிரோமணியை இயற்றி விட்டார். நாலு பாகங்கள் கொண்ட இந்த கணித நூலில் லீலாவதி என்னும் பாகம் அங்க கணிதம் ஜியோமிதி ஆகிய வற்றைப் பற்றி விளக்குகிறது. இதில் கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல், தகுபின்னம், தகாபின்னம், பூஜ்யம் ஆகிய அனைத்தும் மிக விரிவாக எழுதப்பட்டுள்ளன.

## உங்கள் சுற்றுப்புறம்

### தவளை நடனம்

பருவ மழை தவறிவிட்டால், மழையை வரவழைப்பதற்காக கிராமத்து மக்கள் பல வகையான உத்திகளைக் கையாளுகின்றனர்.

ஒரிஸ்ஸா மாநிலத்தில் கிராமத்து மக்கள் 'பெங்கி நாநி நாச்சா' அதாவது 'தவளை நடனம்' என்ற நிகழ்ச்சியை நடத்தினால் மழை வரும் என்று நம்புகின்றனர்.

கிராமத்தினர் உயிருள்ள ஒரு தவளையைப் பிடித்து ஒரு பெரிய தண்ணீருள்ள பானையில் மிதக்க விட்டு, பானையை ஒரு மூங்கிலில் கட்டி அந்த மூங்கிலைப் பானையுடன் தோளில்



சுமந்து செல்கின்றனர். இந்த உர்வலம் தெருவெல்லாம் சுற்றி கிராமத்துக் கோவிலில் முடிகிறது. இங்கே பூஜை செய்த பிறகு, தவளையை அருகில் உள்ள ஆற்றில் அல்லது குளத்தில் விட்டு விடுகின்றனர். அந்தத் தவளை மழையைக் கொண்டு வரும் என்று ஒரு நம்பிக்கை.

## உங்களுக்குத் தெரியுமா?

# பெண்களுக்கு அனுமதியில்லை

ஆண்களுக்குச் சமமாகப் பெண்களும் எல்லாத்துறைகளிலும் இன்று போட்டியிட்டுப் பிரகாசிக்கின்றனர். ஆனால் இன்னும் பெண்கள் பங்கேற்க முடியாத சில இடங்கள் உலகில் உள்ளன.

ஏதோஸ் மலைமீதுள்ள கிரேக்க மடாலயத்திற்குள் இன்றும் பழங்கால முறைப்படி பெண்கள் அனுமதிக்கப் படுவதில்லை. இந்த விதி மனித சாதிக்கு மட்டும் த ான் எ ன்பது இ ல்லை. உயிரினங்கள் எதுவாயிருந்தாலும் பெண் ப ாலைச் ே சர்ந்தவற்றுக்கு அனுமதி கிடையாது. அங்குள்ள சன்னியாசிகளுக்குப் பெண் வாடையே கூடாது.

ஆகவே, இங்கு ஆண்கள் மட்டும் செல்லலாம், பெண்கள் கூடாது. காளைக்கு அனுமதி உண்டு, பசுவுக்குக் கிடையாது. சேவல் செல்லலாம், பெட்டைக் கோழி செல்லக் கூடாது. இந்த விசித்திர வழக்கம் எழுநூறு ஆண்டுகளாக உள்ளது.




## அறிவு வளர

# முக்கிய இடங்கள்

1. ஹைதராபாதிலுள்ள சார்மினார் எதன் நினைவாகக் கட்டப்பட்டது?



2. புது தில்லியிலுள்ள 'இந்தியா கேட்' நினைவுச்சின்னத்துடன் கூட எழுப்பப் பட்ட இன்னொரு நினைவுச் சின்னம் எது?



3. அமிர்தசரஸ் சீக்கியர்கள் தங்கக் கோயில் ஒரு மத குருவால் தொடங்கப் பட்டு மற்றொருவரால் முடிக்கப் பட்டது? அவர்கள் யாவர்?



4. தில்லியிலுள்ள 'ஹுமாயுன் சமாதி'யைக் கட்டிய அரசியின் பெயர் என்ன?



5. மும்பைக் கடற்கரை அருகிலுள்ள தீவில் உள்ள குகைகளின் பெயர் என்ன? அவற்றை உருவாக்கியது யார்?



(விடைகள் 78ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



S. BALASUBRAMANIAN



ANANTHA PRABHAKARA DUTTA

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு செப்டம்பர்2004 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

**மே 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**திரு ஆர். ஸ்ரீனிவாஸ் பிரபு**

55, அனுக்ரஹா காமராஜர் சாலை,
(கேனால் சர்ச் அருகே)
வெட்டுவான் கேணி,
சென்னை-600 041.

பரிசு பெற்றவை





மருத்துவரின் வசதிக்கான கருவி
மீனவரின் வாழ்க்கைக்கான கருவி

## 'அறிவை வளர்க்க?' விடைகள் (பக்கம் 77)

1. ஹைதராபாதிலிருந்து பிளேக் வியாதியை ஒழித்ததின் நினைவாக
2. 1971ம் ஆண்டு இந்தியா-பாகிஸ்தான் போருக்குப் பிறகு கட்டப்பட்ட அமர் ஜவான் ஜோதி
3. குரு ராம்தாஸ், குரு அர்ஜுன் தேவ்
4. ஹமீதா பேகம்
5. எலிஃபெண்டா குகைகள்- ராஷ்ர கூடர்கள்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)




அளிக்கும்

# ''கனவுக் குழந்தைப்'' போட்டி

இந்திய நாட்டு ஜனாதிபதி டாக்டர் ஏ.பி.ஜே. அப்துல் கலாம் அவர்கள் ஒவ்வொரு முறையும் பள்ளிச் சிறுவர்கள் சிறுமிகளுடன் கலந்து உரையாடும்போது அவர்களை நாட்டின் நன்மைக்காகக் கனவு காணும்படி வற்புறுத்துவதுண்டு. கடந்த ஜனவரி மாதம் 25ந் தேதி குழந்தைகளுக்கு அவர் அளித்த சிறப்புப் பேட்டியில், ஒவ்வொருவரையும் கீழ்க்கண்ட பத்து வாக்குறுதிகளை சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொள்ளச் சொன்னார்.

1. நான் கல்வியில் மிகுந்த ஈடுபாடு காட்டி சிறந்து விளங்குவேன்.
2. எழுதப் படிக்கத் தெரியாத நபர்கள் குறைந்தது பத்து பேருக்கு எழுதப் படிக்கச் சொல்லித் தருவேன்.
3. குறைந்தது பத்து மரக்கன்றுகள் நட்டு அவை மரங்கள் ஆகும் வரை நன்கு பராமரிப்பேன்.
4. நகரப்புறத்திற்கும் கிராமப்புறங்களுக்கும் சென்று குறைந்தது ஐந்து நபர்களையாவது சூதாடுவதிலிருந்தும் குடிப்பழக்கத்திலிருந்தும் மீட்பேன்.
5. அல்லலுறும் மக்களின் துயர் தீர்க்க என்னால் ஆன முயற்சி செய்வேன்.
6. மதம்,சாதி, மொழி ஆகியவற்றினால் மக்களிடையே பரவும் வேறுபாடுகளை ஆதரிக்க மாட்டேன்.
7. நான் நேர்மை வழி நடப்பேன். இலஞ்சம் இல்லாத நேர்மையான சமூகத்தை உருவாக்க முயற்சி செய்வேன்.
8. நான் ஒரு விழிப்புணர்ச்சி உள்ள பொறுப்புள்ள குடிமகனாக இருந்து, என் குடும்பத்தினரை நியாயமான வழியில் நடக்கச் செய்வேன்.
9. மனதாலும், உடலாலும் ஊனமுற்ற நபர்களுடன் நட்புரிமையோடு பழகி அவர்களுக்குத் தொண்டு புரிவேன்.
10. எனது நாட்டினுடைய நாட்டு மக்களுடைய வெற்றிகரமான சாதனைகளை மகிழ்ச்சியுடன் கொண்டாடுவேன்.

பள்ளிச் சிறுவர்களும் சிறுமிகளும் மேற்கூறிய பத்து வாக்குறுதிகள் ஒவ்வொன்றையும் தாங்கள் இதுவரை எவ்வளவு நிறைவேற்றியுள்ளனர் என்பதைப் பற்றி ஒவ்வொரு வாக்குறுதிக்கும் ஒரு பாரா எழுதி வரும் சுதந்திர தின விழாவிற்குள் சந்தமாமாவுக்கு அனுப்பவும். அவற்றுள் மூன்று சிறந்த படைப்புகள் நவம்பர் 2004ம் இதழில் வெளியிடப்படும்.

## போட்டியின் விதிமுறைகள்:

*●8 முதல் 15 வயது நிரம்பிய குழந்தைகள் மட்டுமே பங்கேற்க வேண்டும். ● விடைகள் ஆங்கிலத்திலோ அல்லது சந்தமாமா வெளியாகும் எந்த ஒரு மொழியிலுமோ இருக்கலாம். ஆனால் ஒருவர் ஒரு நுழைவுக் கூப்பன் மட்டுமே அனுப்பி பங்கு பெற முடியும். ● யாருடைய உதவியுமின்றி குழந்தைகளால் தங்கள் சொந்த முயற்சியில் அளிக்கப்பட்ட விடைகள் என்று பெற்றோர்கள் சான்றிதழ் வழங்க வேண்டும். ● ஒவ்வொரு பாராவும் 50 வார்த்தைகளுக்குள் இருக்க வேண்டும். ● ஒவ்வொரு மொழி இதழிலும் ரூ500, ரூ250, ரூ100 ஆகிய மூன்று ரொக்கப் பரிசுகளும் சான்றிதழ்களும் வழங்கப்படும். கீழ்க்கண்ட நுழைவுக் கூப்பனைக் கட்டாயம் விடைகளுடன் சேர்த்து அனுப்ப வேண்டும். முடிவுத் தேதி: 31,ஆகஸ்ட், 2004 தாமதமாக வரும் விடைகள் ஏற்கப்படமாட்டாது.*

---

## கனவுக் குழந்தைப் போட்டி

பெயர்: ______________________ வயது: ________ வகுப்பு: ________

பள்ளி: ____________________________________________

வீட்டு முகவரி : ____________________________________________

______________ பின் கோடு :______________ தொலைபேசி எண்: ______________

நுழைவு தலைப்பு ______________ என் மகன்/மகளின் சொந்த முயற்சியில் எழுதப் பட்டவை.

கலந்து கொள்வோரின் கையொப்பம்

பெற்றோர் கையொப்பம்

